REG. NO. M. 3888

16 பக்கங்கள்

விலை அணு ஒன்று

சந்தா விகிதம்
உள்நாடு வருடச் சந்தா .... 5—0—0
பர்மா வருடச் சந்தா .... 6—0—0
வெளிநாடு வருடச் சந்தா .... 7—0—0

# ஊழியன்

விளம்பர விகிதம்
அங்குலம் 1-க்கு வாரம் 1-க்கு 0—8—0
நீடிக்கும் விளம்பரம் அங். 1-க்கு 1—0—0
இப்பக்க விளம்பரத்திற்கு மனேஜருக்கு எழுதவும்

(தேசிய வாரப் பத்திரிகை)

வியாழன் தோறும் வெளிவருவது

மலர் 18 | காரைக்குடி, வெகுதானியஹு மார்கழி மீ 14உ வியாழன் (29—12—1938) | இதழ் 26

## வங்கநாடளித்த சிங்கஏறனையான்

### சந்திரர் உதயம்

வங்காள மாகாணத்தைச் சேர்ந்த கொடாலி எனும் கிராமத்தில் 1897-ம் வருடம் ராஷ்ட்ரபதி சுபாஷ் சந்திர போஸ் பிறந்தார். இவருடைய தந்தை ஜானகிநாத் தாஸ் சிறந்த வழக்கறிஞர். கல்கத்தா மாகாணக் கல்லூரியில் பயின்று கொண்டிருக்கும் பொழுதே பிரத்தியேக புத்தகங்களையும், பத்திரிகைகளையும் வாசித்து நாட்டின் அரசியல் நிலைமையை ஆராய்ந்து கொண்டே வந்தார். பி. ஏ. பட்டம் பெற்றதும் இங்கிலாந்து சென்று ஐ. ஸி. எஸ். பரீட்சையிற் கலந்து நாலாவது மாணவராகத் தேறினர்.

### உள்ளத்தில் எரிமலை

சுபாஷ் சந்திரர் பம்பாய்க்கு வரும் போது பஞ்சாப் படுகொலையால் நாடெங்கும் ஏகக் குழப்பம். மேலும் நாட்டில் நடைபெற்ற துர்ப்பாக்கிய நிகழ்ச்சிகள் சந்திரரின் உள்ளத்தை உறுத்தின. உடனே தமது ஐ.ஸி.எஸ். பட்டத்தை நிராகரித்தார்; தமது வக்கீல் உத்தியோகத்தையும் ராஜிநாமாச் செய்தார். வங்கச் சிங்கமாகிய தேசபந்துவிற்கு வலது கைபோலானர். தேசப்பணியில்ஆர்வங்கொண்டசுபாஷ் வங்காள தேசியக் கல்லூரியின் பிரின்ஸ்பால் பதவி யேற்றூர். சுபாஷ் தேசியப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டார். எனவே வங்காள கவர்னரால் கைது செய்யப்பெற்று ஆறுமாத தண்டனை யடைந்தார்.

ஒத்துழையாமை இயக்கத்தின் போது காந்திஜி சிறைப்பட்டார். புதிய 'சுயராஜ்யக் கட்சி'யின் நோக்கங்களை சரிவர நிறைவேற்றுவதற்காக ஆரம்பிக்கப்பெற்ற 'பார்வர்ட்' என்ற பத்திரிகைக்கு சுபாஷ் பிரதம ஆசிரியரானர். பின்னர் 1924-ம் வருடம் வங்காள அவசரச் சட்டத்தின் கீழ் மீண்டும் சுபாஷ் சந்திரர் கைதியானர். அலிபூர், பெர்ஹாம்பூர், மாந்தலே முதலான இடங்களில் சிறை வாழ்க்கையை அனுபவித்தார்.

சிறையில் காச நோயால் பீடிக்கப்பட்டு அபாய நிலையிலிருந்தார். உடல் நிலை காரணமாக சர்க்காரால் 1927ம் ஆண்டில் ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்டார். மறுநாள் சர்க்கார் அவரை விடுதலை செய்தனர். பின்னர் பாபுவின் உடலும் தேறியது.

கல்கத்தாவிற் கூடிய 43-வது காங்கிரஸில் சுபாஷ் சந்திரர் 'கலப்பற்ற பரிபூரண சுயராஜ்யமே வேண்டும்' என வற்புறுத்தினர். 1929ம் வருடத்தில்

—பிளாக் போஸ் பிரசுராலயத்தாருடையது

### ராஷ்ட்ரபதி சுபாஷ் சந்திர போஸ்

ஏகாதிபத்தியம் ஒழிய வேண்டுமென பலவிடங்களில் பிரசாரஞ் செய்தார். அதேவருடம் டிசம்பர் மாதத்தில் கூடிய லாகூர் காங்கிரசில் மகாத்மாவால் பிரரேபிக்கப் பெற்ற பரிபூரண சுயேச்சைத் தீர்மானத்தை சுபாஷ் சந்திரர் ஆதரித்தார்.

### சிறையில் மிருகத்தனம்

இந்தத் தீர்மானத்தை ஆதரிக்குமுகத்தான் நாடெங்கும் சுயேச்சை விழா கொண்டாடப்பெற்றது. 1930ம் வருடத்தில் ராஜத்துவேஷ காரணமாக சுபாஷ் சந்திரர் ஒரு வருடக் கடுங்காவலுக்கு ஆளாகினர். அன்னர் சிறை புகுந்தும் எல்லா விடங்களிலும் விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. மக்கட்குதேசியஆர்வம் அதிகரித்தது; சிறைக் கோட்டத்திலும் தேசியக் கொடி யேற்றிவைக்கப்பெற்றது. சிறை அதிகாரிகள் சுபாஷைக் கடிந்தும்கூட, அவர்களால் உண்மையை அறிய முடியவில்லை. சிறை நிர்வாகிகட்கும் அரசியல் கைதிகட்குமிடையே ஏற்பட்ட சச்சரவு காரணமாக சுபாஷ் சந்திரர் மிருகத்தனமாய் நடத்தப்பட்டார். கீழே தள்ளப்பட்டு மூர்ச்சையானர்; கை மணிக்கட்டு பிறழ்ந்து ஜுரங் கண்டது.

1930-ல் காந்தியடிகள் ஆரம்பித்த உப்பு சத்யாக்ரகம் நடைபெற்றபோழ்து சுபாஷ் சந்திரர் விடுதலையானர். எனினும் சர்க்கார் மீண்டும் அவர்மீது தடையுத்தரவைப் பிரயோகஞ் செய்தனர். ஆனல் அவர் அவ்

### சந்திரர் வரலாறு

வுத்திரவிற்குக் கீழ்ப்படியவில்லை. உடனே கைது செய்யப்பட்டார். பல சிறைகட்கு மாற்றப்பெற்று மீண்டும் நோய்வாய்ப்பட்டார். விடுதலை செய்யப்பட்டார். 'சிறை—விடுதலை' என்று மாறி மாறி அநுபவித்தார்.

### கல்கத்தா மேயர்

கல்கத்தா கார்ப்பொரேஷனின் பிரதம நிர்வாகியாக இருந்த பாபு மேயர் பதவிக்கு உயர்த்தப்பட்டார். 1931-ம் ஆண்டில் போலீசாரால் அடிபட்டு ஆறு மாதக் கடினகாவலும் விதிக்கப்பட்டார். உப்புப் போர் முடிந்ததும் விடுதலையானர். 1931-ம் வருடத்தில் லண்டனில் இரண்டாவது வட்ட மேஜை மகாநாடு கூடியபோழ்து, 'பந்தோபஸ்து' கைதியான சுபாஷ் சென்னை சிறைச்சாலைக்குக் கொண்டு வரப்பட்டார். 1933-ம் ஆண்டு வைத்திய சிகிச்சைக்காக வியன்னு சென்றூர். அவ்வமயம் வியன்னுவில் காலமான ஸ்ரீ. வித்தல்பாய் வெளிநாட்டில் இந்திய நிலைமையைப்பற்றி பிரசாரஞ் செய்வதற்காக சுபாஷ்சந்திர் போரால் ஒரு லட்ச ரூபாய் உயில் எழுதிவைத்தார். 1934 டிசம்பரில் அவர் கல்கத்தா வந்து சேர்ந்ததும் போலீசாரால் மீண்டும் அவருக்குத் தடையுத்தரவு சார்வு செய்யப்பெற்றது. வீட்டில் தங்கியிருந்தபொழுது மறுபடியும் உடல் நிலை குன்றியது. எனவே 1935-ல் ஐரோப்பாவுக்குப் பிரயாணமானர். முசோலினியைக் கண்டுபேசினர்.

### டி வாலரா சந்திப்பு

1936-ல் சுபாஷ் அயர்லாந்துக்கு விஜயஞ் செய்தபோழ்து குடியாட்சித் தலைவர் டி-வாலரா அவருக்கு ஓர் விருந்தளித்தார். சுபாஷ் 'இந்தியப் போராட்டம்' எனும் அரிய நூலை எழுதியுள்ளார். ராஜத்துவேஷக் குற்றத்திற்காக அவர் பம்பாயில் கைது செய்யப்பெற்று உடல் நலங் குன்றியதால் 1937 மார்ச் மாதத்தில் விடுதலை செய்யப்பெற்றூர்.

சுபாஷ் சந்திரருக்கு 41 வயதாகியும், இன்னும் விவாகத்தைப்பற்றிய சிந்தனையே அவர் உள்ளத்தில் குடிபுகவில்லை. தன் வாழ்நாள் முழுமையும் தேசப் பணிக்கு அர்ப்பணஞ் செய்துள்ளார். சந்திரர் அபேதவாதக் கொள்கையுடையவர். தேசப் பணியே சிறந்த சேவை என்ற உயரிய லட்சியத்தைக் கொண்டுள்ள சந்திரர் இன்று அகில இந்தியக் காங்கிரஸ் தலைவராக விளங்குகின்றூர். மக்கள் அன்னரை வாழ்த்துகின்றனர்.

சிறு கதை

## சிறந்தவர் தேர்தல்

பிரேம் சந்த்

ஹிந்தியில் சிறு கதை, நாவல் ஆகியவற்றில் ஸ்ரீ பிரேம் சந்த் மிகப் பிரசித்தி பெற்றவர். அவர் எழுதிய கதையையே இங்கு தமிழில் மொழி பெயர்த்துத் தரப்பட்டிருக்கிறது —ஆ-ர்.]

தேவகடு என்பது ஒரு சிறு ராஜ்யம். அதனுடைய திவான் சுஜான் சிங் மிக வயோதிகர். அவருக்குக் கடவுள்மீது மிகுந்த பக்தி ஏற்பட்டது. ஒருநாள் சுஜான்சிங், தேவகடு மகாராஜாவிடம் சென்று,

"ஏழைகட்கிரங்கும் அரசே! நான் கடந்த 40 ஆண்டுகளாய்த் தங்களிடம் ஊழியம் செய்திருக்கிறேன். இப்போது சிறிது காலமாய், பகவானுக்கு ஊழியம் செய்யவேண்டுமென்று விரும்புகிறேன். தவிர, எனக்கும் விருத்தாப்பியம் வந்துவிட்டது. ராஜ்ய காரியங்களைத் தாங்குவதற்குரிய சக்தி இல்லை. ஏதேனும் தவறுகள் நேரிடுமாயின், நான் இதுவரையில் என் வாழுட்களிலே நான் சம்பாதித்த நல்ல பெயரும் அழிந்து போய்க் கலங்கம் உண்டாகும்" என்ருர்.

நெறிமுறை தவருத திவானுக்கு மன்னர் கௌரவமளிக்கத் தவறுவதேயில்லை. ஆதலின், மன்னர் திவானுக்கு வேண்டியவரை சொன்னுர். திவான் இணங்காதது கண்டு, மன்னர் அவருடைய வேண்டுகோளை அங்கீகரித்துக்கொண்டார்.

சுஜான் சிங்கின் கோரிக்கை நிறைவேறியதென்றுலும், அவருக்குப் பின்னர் அவருடைய திவான் பதவிக்குரிய ஆளை அவரே தேர்ந்தெடுக்க வேண்டிய பொறுப்பு அவர்மீது சுமத்தப்பட்டது.

மறுநாள் தேவகடு ராஜ்யத்திலுள்ள சகல பத்திரிகைகளிலும் கீழ்க்கண்ட விளம்பரம் வெளியாயிற்று:—

"தேவகடுக்கு யோக்யமுள்ள ஒரு திவான் தேவை. யார் யார் இப்பொறுப்புக்குத் தாம் யோக்யமுள்ளவர் என்று நினைக்கிருர்களோ, அவர்கள் இவ்வுத்தியோகத்துக்கு விண்ணப்பம் செய்துகொள்ளலாம். பட்டதாரிகளாயிருக்கவேண்டும் என்கிற அவசியமில்லை. ஆனல் உடற்கட்டுடன் தேக பலம் உடையவராயிருக்கவேண்டியது மிக அவசியம். அஜீரணமும் வியாதியும் கொண்டவர்கள் இப்பிரயாசையில் கலந்து கொள்ள வேண்டியதில்லை. ஒரு மாதம் விண்ணப்பதாரிகளுடைய நடை உடை பாவனை ஆசாரம் முதலியவைகள் நன்கு சோதிக்கப்படும். இச்சோதனையிலே படிப்பு சம்பந்தப்பட்டவை மிக மிகக் குறைவாயும், கடமையைப் பற்றிய விஷயங்களே மிக அதிகமாயும் கவனிக்கப்படும். இப்பரீட்சையில் எவர் தேர்ச்சிபெறுகிருரோ அவரே நன்மைபெறுவார்"

இவ் விளம்பரம் ராஜ்யமுழுதும் ஒரு பெரிய பரபரப்பை உண்டாக்கிற்று. இப் பெரிய பதவிக்கு எவ்விதக் கட்டுப்பாடும் விதிக்கப்படவில்லை; வெறும் அதிர்ஷ்டத்தின் விளையாட்டுத்தான்!

நூற்றுக்கணக்கானவர் தத்தம் பாக்யத்தைச் சோதித்துவிட வேண்டுமென்று முனைந்தார்கள். ஒவ்வொரு ரயில் வண்டியிலும் விதம் விதமான மக்கள் தேவகடுவில் வந்திறங்கினர். சிலர் பாஞ்சால வாசிகள், சிலர் மத ராஸிகள்; சிலர் நவ நாகரிக்காரர்கள், சிலர் புராதன வைதிகர்களாயுமிருந்தனர். பண்டிதர்கள் முதல் மௌல்விகள் வரையில் தங்கள் அதிர்ஷ்டத்தைப் பார்ப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது.

பாவம், அவர்கள் அனைவரும் தங்களுடைய பட்டங்களின் பெயர்களைச் சொல்லிச் சொல்லி, பட்டத்தையே கட்டியழுதார்கள். ஆனல் அதற்கு இங்கு இடமில்லை. பல்வகைப்பட்ட விண்ணப்பதாரிகள் அங்கிருந்த போதிலும், பட்டதாரிகளே அங்கு பெரும்பான்மையோராயிருந்தார்கள். ஆதலின், எந்த இடத்தில் பட்டம் தேவையில்லாதிருந்ததோ, அந்த இடத்திலே பட்டத்தின் படுதா தொங்கிக்கொண்டிருந்தது!

சுஜான் சிங் இம் மகானுபாவர்களுக்கு வேண்டிய மரியாதை வசதிகள் ஆகியவற்றைச் சரிவர செய்திருந்தார். விண்ணப்பதாரிகள் தத்தம் அறைகளிலே உட்கார்ந்துகொண்டு, முஸ்லீம்கள் (ரம்சான்) பண்டிகைக் காலத்தில் விரதம் இருப்பதைப்போல, மாதத்தின் நாட்களை எண்ணிக் கொண்டேயிருந்தார்கள். ஒவ்வொருவரும் தம்முடைய வாழ்க்கையைத் தமக்குத் தெரிந்த அளவில் நல்ல வழியில் காட்டவே முயற்சி செய்து கொண்டிருந்தனர்.

ஸ்ரீமான் 'ஆ' எப்போதும் 9—மணி வரையில் தூங்குவது வழக்கம். இந்நாட்களில் சூரியோதயத்தின்போது அவர் தோட்டத்தில் உலவிக்கொண்டிருப்பார்! ஸ்ரீமான் 'பா' ஹுக்கா குடிக்கும் பழக்கமுடையவர். அவர் இப்போது இராக் காலங்களில் மட்டும், கதவைத் தாளிட்டுக் கொண்டு, இருட்டில் சுருட்டுக் குடித்தார்! மற்றும் 'தா' 'ஸா' 'ஜ' ஆகியோர், தம் வீட்டிலுள்ள வேலைக்காரர்களிடம் நொடிப் பொழுதில் கோபமாய்ச் சீறி விழுவது வழக்கம். இப்போது அவர்கள் வேலைக்காரர்களைப்பார்த்து, 'நீங்கள்—ஐயா' என்று மரியாதைச் சொற்களால் அழைத்தார்கள்.

சுயமரியாதை மிக்க தோழர் 'கா' ஒரு நாஸ்திகர். அவர் ஹக்ஸ்லியின் பரம சீடர். ஆனல் இந்நாட்களில் அவருடைய நியமனிஷ்டைகளைப் பார்த்து, கோயில் பூசாரிகூட வேலையைவிட்டுத் தான் போய்விடலாமா என்று நினைத்தார்.

திருவாளர் 'லா' புத்தகங்களைக் கண்டாலே மிக வெறுப்புடையவர். அவர் இப்போது பெரிய பெரிய மத நூல்களைப் படிப்பதில் ஆழ்ந்திருந்தார்.

எவரிடம் பேசினுலும், வேதாந்த விசாரணையில் ஈடுபட்டிருப்பவராகவே காணப்பட்டார். இந்துக்கள் வேத பாராயணத்திலும் முஸ்லீம்கள் நமாஸிலும் ஈடுபட்டிருந்தார்கள். எப்படியாவது கஷ்டப்பட்டுக்கொண்டு இந்த ஒரு மாத காலத்தைக் கழித்து, தேர்ச்சியடைந்துவிட்டால், பின்னர் இவைகளைப் பற்றியெல்லாம் எவரும் கேட்கப் போவதில்லை யென்று ஒவ்வொருவரும் நினைத்தார்கள்.

ஆனல் வயது முதிர்ந்த சுஜான்சிங், மாணிக்கத்தைத் தேர்ந்தெடுப்பவர் போல, தனியாயிருந்துகொண்டு இப்பருந்துக் கூட்டத்தில் அன்னம் எங்கே மறைந்துகொண்டிருக்கிறதென்று தேடிக்கொண்டிருந்தார்.

ஒரு நாள் நவநாகரிகக்காரர்களிடையே, 'ஹாக்கி' விளையாட வேண்டும் என்கிற எண்ணம் உண்டாயிற்று. இந்த எண்ணம், இவ் விளையாட்டில் மிகத் தேர்ச்சி பெற்றவர்களிடமிருந்து உதயமாயிற்று. இதுவும் ஒரு வித்தைதான்; இதை ஏன் மறைத்து வைக்க வேண்டும்? கைக்கு நல்ல பயிற்சி தருவது.

தீர்மானம் நிறைவேறியது, கோர்ட் தயாராயிற்று, ஆட ஆரம்பித்தார்கள். வேலைகற்றுக்கொள்ளும் 'அப்ரெண்டிஸ்'ஸைப்போல பந்து அடிபட்டு நாலா பக்கங்களிலும் அலைந்துகொண்டிருந்தது. தேவகடு ராஜ்யத்துக்கு இது புது விஷயம். ஊரிலுள்ள படித்த மக்கள் செஸ் (சதுரங்கம்), சீட்டு ஆகியவற்றையே கம்பீரமாய் மதித்து விளையாடுவார்கள். ஓடுவதையும் குதிப்பதையும் குழந்தை விளையாட்டாய் நினைத்தார்கள். விளையாட்டு மிக உத்சாகத்துடன் நடந்துகொண்டிருந்தது. பந்தை எடுத்துக்கொண்டு விரைந்து ஓடவாரம்பித்ததும், ஒரு அலை பெருகி வருவதுபோலிருந்தது. ஆனல் எதிர் கட்சிக்காரர், இப் பெருகிவரும் அலையைத் தடுக்கின்ற இரும்புச் சுவர் போல இருந்தார்கள்.

மாலை வரையில் இவ் விளையாட்டு மிக மும்முரமாயிருந்தது. விளையாடிக் கொண்டிருந்தவர்கள் வியர்வையில் நனைந்திருந்தார்கள். இரத்தத்தின் உஷ்ணம் கண்களிலும் முகங்களிலும் தவழ்ந்து கொண்டிருந்தது. பெருமூச்சு விட்டுக்கொண்டே களைத்திருந்தனர். ஆனல் வெற்றி தோல்வி நிர்ணயமாகவில்லை. இருட்டியும் விட்டது.

இம் மைதானத்துக்குச் சிறிது தூரத்திற்கப்பால், ஒரு வாய்க்காலிருந்தது. அதற்குப் பாலம் கிடையாது. வழிப்போக்கர் வாய்க்காலைக் கடந்துதான் போகவேண்டும்.

அப்பொழுதுதான் விளையாட்டு நிறுத்தப்பட்டது. விளையாட்டுக்காரர்கள் உட்கார்ந்து இளைப்பாறிக்கொண்டிருந்தனர். ஒரு குடியானவன் தானியங்கள் நிறைந்த ஒரு வண்டியை ஓட்டிக்கொண்டு வாய்க்காலில் வந்தான். வாய்க்காலில் சேர் மிகுதி. ஏற்றத்தில் வண்டி ஏறமாட்டாமல் அவ்வளவு உயரமாயிருந்தது. குடியானவன் ஒரு தரம் காளைகளை அடித்து அதட்டுவான். ஒரு தரம் சக்கரங்களைப் பிடித்துத் தள்ளுவான். ஆனல் பாரம் மிக அதிகமாயும் காளைகள் மிகவும் பலஹீனமாயும் இருந்தன. வண்டி ஏற முடியவில்லை. ஏறினல், ஏறிச்சென்ற தூரம் திரும்பவும் பின்னல் கீழே வந்துவிடும். குடியானவன் அடிக்கடி பலங்கொண்ட மட்டும் தள்ளிப்பார்த்தான். அடிக்கடி காளைகளை கோபத்துடன் அடித்துப்பார்த்தான், ஆனல் வண்டியோ ஏறுகிறதென்கிற நாமதேயத்தையே காணும். நம்பிக்கையை யிழந்து, இங்குமங்கும் பார்த்தான். உதவி செய்வதற்கு ஒருவரும் அகப்படவில்லை. வண்டியை அப்படியே தனியாய்விட்டு எங்கேயும் போகமுடியாது மிருந்த ஆபத்தில் அகப்பட்டுக்கொண்டான்.

இதற்கிடையில் விளையாட்டுக்காரர்கள், கைகளில் மட்டைகளுடன் அசைந்து அசைந்து வந்துகொண்டிருந்தார்கள். குடியானவன் அவர்கள் பக்கம் பயம் மிகுந்த கண்களோடு பார்த்தான். யாரிடத்திலும் உதவி கேட்பதற்குத் தைரியமில்லை. விளையாட்டுக்காரர்களும் அவனைப் பார்த்தார்கள், ஆனல் மூடிய கண்களால் எவரிடத்திலும் சகோதரத்தன்மை என்கிற பெயரேயில்லை. எல்லோரிடத்திலும் சுயநலமே யிருந்தது. ஆனந்தமிருந்தது. உதாசீனமிருந்தது. வாத்சல்யம் என்கிற பெயரையே காணும்.

ஆனல் அக் கூட்டத்தில், தயாளமும் தைரியமும் நிறைந்த ஒருவர் இருந்தார். அன்றைய 'ஹாக்கி' விளையாட்டில், அவருடைய காலில் காயம் பட்டிருந்தது. நொண்டி நொண்டி மெதுவாக நடந்து கொண்டிருந்தார். அகஸ்மாத்தாக, அவருடைய பார்வை வண்டி மீது விழுந்தது. அவர் நின்றுவிட்டார். குடியானவனைப் பார்த்ததும் அவருக்குச் சகல விஷயங்களும் புரிந்தன.

மட்டையைத் தரையில் வைத்துவிட்டு, கோட்டையும் கழற்றிவிட்டு, குடியானவனிடம் சென்று,

"நான் உன்னுடைய வண்டியை ஏற்றி விடட்டுமா?"

எனக் கேட்டார். குடியானவன் தனக்கெதிரே உயரமான தடித்த ஒரு மனிதரைக் கண்டான், பயந்து கொண்டே அவன் சொன்னுன்:

"நான் அதை எவ்விதம் சொல்லட்டும்?"

"நீ நீண்ட நேரமாய் அகப்பட்டுக்கொண்டிருக்கிருய் போல் தெரிகிறது. நல்லது; நீ வண்டியில் ஏறிக்கொண்டு காளைகளை ஓட்டு. நான் சக்கரங்களைத் தள்ளுகிறேன். வண்டி இப்போதே போய்விடும்"

என்ருன். குடியானவன் வண்டியில் ஏறி உட்கார்ந்தான். வாலிபர் சக்கரங்களைப் பலத்தோடு தள்ளினுர். முழங்கால்மட்டுமுள்ள சகதியில் அகப்பட்டுக்கொண்டார். என்ருலும் தைரியத்தை இழக்கவில்லை. திரும்பவும் பலங்கொண்ட மட்டும் தள்ளினுர். குடியானவன் காளைகளை விரட்டினுன். காளைகளுக்கும் உதவி கிடைத்தது.

(15-ம் பக்கம் பார்க்க)





# மூனிச் முடிந்தும் சேம்பர்லேன் ஓயவில்லை

## பிரெஞ்சுப் பிரதேசத்தில் முசோலினியின் ஆசை

['சண்டே ஸ்டாண்டர்ட்' எனும் ஆங்கிலப் பத்திரிகையின் லண்டன் நிருபர் எழுதிய கடிதம் இது. டிசம்பர் 8-ம் தேதி இது எழுதப்பட்டதாயினும் ஐரோப்பிய நிலைமை இதில் விளக்கப்படுகிறது. இக் கடிதத்தில் ஆங்காங்கு பிரிட்டிஷ் அதிகார வர்க்க மனப்பான்மையைச் சிறிது காணலாம்; எனினும், ஸ்பெயினைப்பற்றியும் ஸ்ரீ ஈடனைப்பற்றியும் இந் நிருபர் கூறுவது கவனிக்கத் தக்கது.]

★

### 'டுனிஸா, கார்ஸிகா, நைஸ்'

பாஸிஸ சபையில் இந்த முழக்கம் வானளாவக் கிளம்பிற்று. கவுண்ட் கியானே சபையில் பிரசங்கம் புரிந்துகொண்டிருந்தார். அன்றைக்குத்தான் பிரான்சில் பொதுவேலை நிறுத்தம் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. கவுண்ட் நிகழ்த்திய பிரசங்கம் பாஸிஸ சபைக்காக மட்டும் பேசப்பட்டதல்ல, அது இத்தாலி தேசத்துக்காகவும் செய்யப்பட்டதல்ல. முக்கியமாக மேல் நாடுகளிலுள்ள ஜனநாயகப் பிரதேசங்கள் சகலவற்றிற்கும் சேர்ந்தாற்போல் அப் பிரசங்கம் புரியப்பட்டது.

ஐரோப்பிய ஜனநாயக தேசங்கள் மிகுந்த பயத்துடன்தான் காலங் கழித்துக் கொண்டிருந்தன. ஆங்கிலேயருடைய மனப்பான்மையும் உணர்ச்சியும் மூனிச் ஒப்பந்தத்துக்கு விரோதமோஎன்னவோ,பிரதம மந்திரி சேம்பர்லேன் மட்டும் பொதுஜனங்களைத் திருப்திசெய்வதற்காக தீவிர பிரயத்தனத்துடன்என்னென்னவோகாரணங்களைச் சொல்லி சமாதானப்படுத்திக் கொண்டார். சேம்பர்லேனின் முயற்சிக்கு அவ்வப்போது குந்தகம் ஏற்படுவதுண்டு. இத்தகைய தடைகளிலே யூதர் பிரச்னை மிக முக்கியமானதாகும். இதற்குள்ளாக பிரான்ஸில் ஒரு குழப்பம் ஏற்பட்டது. தொழிலாளர்கள் பொதுவேலை நிறுத்தம் செய்வதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். டலேடியரும் இவ்வேலைநிறுத்தத்தைப் பயனற்றதாக்கிவிட வேண்டுமென்று—வேலை நிறுத்தம் ஏற்படாமலே தடைசெய்துவிடுவதற்கு சகல ஏற்பாடுகளையுஞ் செய்திருந்தார். முசோலினிக்கு டலேடியர் இம்முயற்சியில் வெற்றி காண்பார் என்கிற நம்பிக்கை கிடையாது. லண்டனில் ஏராளமான மக்கள் முசோலினியைப் போலத்தான் எண்ணினுர்கள்.

டலேடியர் பல இடையூறுகளுக்கு நடுவிலே சிக்கிக்கொண்டிருக்கும் போது, கவுண்ட் கியானே பிரசங்கம் பொழிந்தார்; மிகத் துணிச்சலுடன்!

'டுனிஸா, கார்ஸிகா, நைஸ்' என்ற முழக்கம் எங்கும் கேட்டது!

கவுண்ட் கியானேவின் பிரசங்கம் வெகு உருக்கமாகத்தானிருந்தது. அந்நிய நாட்டுக் கொள்கையை நிர்ணயிக்கின்ற உரிமை, இன்னும் சர்வாதிகார நாடுகளிடம்தான் இருக்கின்றது என்பதை, 'மூனிச் ஒப்பந்தம் நிதர்சனமாக ஊர்ச்சிதப்படுத்திற்று. பிரிட்டிஷ் கப்பற் படையை அதிகரித்துக் கொண்டு வருவதைப்பற்றி கவுண்ட் கியானே வாய் திறக்கவேயில்லை. அப்படிச் செய்ததுதான் முஸோலினியைப் பணியவைத்தது. ஏதேனும் ஒரு ஏற்பாட்டைச் செய்துகொள்ள வேண்டுமெனத் தூண்டியது. இதைப் பற்றிய பேச்சையே விரும்பாத மந்திரி சபை, அதைச் செய்யும்படியாகத் தூண்டியதும் அதுதான். நம்முடைய நோக்கமெல்லாம் வியாபாரந்தான் என்பதை சர்வாதிகாரிகளுக்கு உணர்த்திவைத்ததும் அதுவேயாகும்.

மூனிச் ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. கப்பற் படையைத் திரட்டுகிற மும்முரம் இப்போது குறைந்துவிட்டது. குறைந்தாலென்ன? பிரிட்டிஷ் கப்பற்படை எந்தச் சமயத்திலும் போதுமான அளவுக்கு மேலேயேதான் "இருந்துகொண்டிருக்கிறது. அல்லவா?

இத்தாலி மீண்டும் தன் சுயரூபத்தைக் காட்டலாம். கிரேட் பிரிட்டனுடன் அது செய்துகொண்டிருக்கின்ற ஒப்பந்தம் இப்போது அமுலுக்கு வந்துவிடுகிறது. பிரான்ஸின் மீதுள்ள கோபத்தை அடக்கிவைத்துக் கொண்டிருந்தது.

'டுனிஸா, கார்ஸிகா, நைஸ்' குட்டு வெளிப்பட்டுவிட்டது!

### பிரெஞ்சுக்காரர் யோசனை

துரதிர்ஷ்டவசமாகப் போட்டிருந்த திட்டம் சிறிதளவு தவறிவிட்டது. பொதுவேலை நிறுத்தம் ஆரம்பிக்கும் முன்னரே ஓய்ந்துவிட்டது. மிதவாதக் கட்சிக்கும் தீவிரக்கட்சிக்கும் இருந்த அபிப்பிராயபேதம் குறைந்தது, பயங்கர நிலைமையைத் தாண்டியாகிவிட்டது. பிரெஞ்சு மக்களின் நற்குணம் டலேடியருக்கு, சரியான சந்தர்ப்பத்தில் மிக அனுசரணையாயிருந்தது. இதன் பயனுய் பிற்போக்காளருடைய உதவியையோ,அல்லது ஏகாதிபத்தியப் போக்குடையவர்களுடைய உதவியையோ டலேடியர் நாடவேண்டிய அவசிய நிலைமையிலிருந்து தப்பித்து விட்டார்கள். வேலை நிறுத்தம் செய்ய நினைத்தவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எதுவும் எடுத்துக்கொள்ளக் கூடாதென்று வற்புறுத்தப்பட்டது.

பிரெஞ்சுக்காரர்கள் சுபாவத்திலேயே தேசாபிமானிகள்; விடுதலை உணர்ச்சியுள்ளவர்கள்; சுதந்திரம் அளிக்கவும் அனுபவிக்கும் ஆர்வமுடையவர்கள். அவர்களுடைய இரத்தத்திலே இது கலந்து தோய்ந்து உறைந்து கிடக்கிறது. வேலை நேரம், சம்பளம் ஆகிய யாவற்றையும் அவர்கள் சுதந்திரத்தை முன்னே வைத்துத்தான் தாங்களே ஏற்படுத்திக் கொள்வார்கள். சமாதானத்தில் மிகப் பிரியர்கள். அவர்களுடைய சமாதானம் என்பது, எதிரிகள்மீது ஒரு குரோதத்தையும் கொண்டது. போலந்துக்காகவும் செக்கோஸ்லோவேகியாவுக்காகவும் ஒரு பிரெஞ்சுக்காரன் போர் புரிய மாட்டான். அவன் பிரான்சுக்காக மட்டுமே போர் புரிவான். ஜர்மெனியிடமோ இத்தாலியிடமோ யுத்தம் செய்யும்படி நேரிட்டால், தன்னுடைய வாழ்க்கை வசதிகளில் பெரும் பங்கைத் தான் விட்டுக்கொடுக்க வேண்டுமென்பதை நன்கு உணர்ந்து வைத்திருக்கிருன்.ஜர்மெனி, இத்தாலி ஆகிய நாடுகளின் இராணுவ பலத்தை எதிர்த்தால், போதிய உணவு இல்லாமல் ஆகிவிடுமென்று நடுங்குகிருன். இராணுவப் படை என்பது பிறரை ஒட்டாண்டியாக்கி வைக்கிற ஒரு கூட்டம் என்பது அவனுடைய உத்தேசம்.

ஆகையால், டிசம்பர் முதல் தேதி மிக அமைதியாகக் கழிந்தது. எனினும் பூரண அமைதியுடன் கழிந்ததாகச் சொல்லமுடியாது. ஏனென்ருல், 'டுனிஸா, கார்ஸிகா, நைஸ்' என்ற கூச்சல் பாரிஸ் நகர வீதிகளில் எங்கும் எல்லோருடைய வாயிலிருந்தும் கிளம்பிக்கொண்டிருந்தது.பிரெஞ்சுக்காரர்களுக்குக் கடுங் கோபம். இரண்டு வருஷங்களென்றும், அதற்கு மேலே என்றும்கூடச் சொல்லலாம்; இத்தாலிக்காரர்களும் ஜர்மானியரும் பைர்னீஸின் மறு புறத்திலிருந்து ஏதேனும் தொந்திரவு கொடுத்துக் கொண்டே யிருந்தார்கள். இப்போது பாஸிஸச் சபையில் ஒரு கிளி கூச்சல் போடுகிறது. 'ஆப்ரிக்காவிலுள்ள—பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமான பிரதேசங்கள்மீது முசோலினி கண்வைத்திருக்கிருர்'; நெப்போலியன் பிறந்த தீவும்தும், பிரான்ஸின் மிக அழகுவாய்ந்த ஒரு நகரத்தின்மீதும் அவர் பேராசை வைத்திருக்கிருர்.'

குரோதம் என்பது ஒரு பெரிய சக்தி. அது சில காரியங்களைச் சித்தி பெற வைக்கும். பிரெஞ்சுக்காரர்கள் இந்தக் கிளியின் கூச்சலை இலகுவில் மறக்கமாட்டார்கள்; மறக்கக் கூடியதா? பிரான்சுக்கும் பிரிட்டனுக்கும் உள்ள நேசப் பான்மையை முசோலினி குலைத்துவிட நினைப்பது எவ்வளவு கேவலம், எவ்வளவு ஆபாசம்! அது இலகுவில் முடியாத ஒன்று!!

இந்த இரண்டு தேசங்களுக்கும் (கிரேட் பிரிட்டனுக்கும் பிரான்சுக்கும்) அடிக்கடி தகராறுகள் ஏற்படுவதுண்டு. ஜர்மெனியுடன் ஏற்படுத்திக் கொண்ட பாயின்கேர் திட்டம் கிரேட் பிரிட்டனுக்குப் பிடிக்கவில்லை. தவிர கிழக்குத் தேசங்களுடன் பிரான்ஸ் செய்துகொண்டுள்ள ஒப்பந்தம் போன்ற விஷயங்களை பிரிட்டன் அருவருக்கிறது. உதாரணமாக பிரெஞ்சு—சோவியத் ஒப்பந்தம் பிரிட்டனுக்குப் பிடிக்காத ஒன்று. ஆனல் பிரான்சு இப்போது தன்னைப் பாதுகாத்துக் கொண்டாலே போதுமென்கிற நிலைமையில் இருந்துகொண்டிருக்கிறது எனினும் தான் அழிந்து விடக்கூடாதென்கிற கவலையில் பிரிட்டன், எதற்கெடுத்தாலும் பிரான்சை இழுத்து இழுத்துப் போட்டுக்கொள்கிறது.

ஒப்பந்தம் என்பது இருதரப்பாருக்கும் பொதுவானது. பிரான்சும் சரி, பிரிட்டனும் சரி, அது அது தன் தன் கோரிக்கைகளை வெளியிடலாம்.

பாஸிஸ சபையில் கவுண்ட் கியானே போட்ட கூச்சல் ஜெனரல் பிராங்கோவின் லட்சியத்தைப் பாதிக்கத் தொடங்கிற்று. ஏனெனில் பிரான்சு, முன்பெல்லாமிருந்ததைவிட இப்போது மிகக் கண்டிப்பாக உதவிசெய்ய மறுத்துவிடும். வரும் மாரிக்காலத்தில் ஸ்பெயினிலுள்ள மக்கள் உணவில்லாமல் சாகப்போகிருர்கள் என்கிற பயம் இப்போது அடங்கிவிட்டது. ஆகவே, இச் செய்திகேட்டு இந்தியா, தென்னுப்ரிக்கா, ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து ஆகிய இடங்களிலுள்ள பிரிட்டிஷ் பிரஜைகள் இப்போது கவலையில்லாதிருக்கலாம்!

### தாம் பைத்தியக்காரரல்லவாம்!

மத்திய தரைக் கடலுக்குள் பிரவேசிக்கும் ஸ்தலம், ஒரு சர்வாதிகாரியின் நாடாயிருக்க வேண்டுமென்று லண்டனிலுள்ள எந்த அதிகாரியாவது விரும்புவாரா? எந்தப் பைத்தியக்காரரும் அந்தமாதிரி இருக்கவே மாட்டார்.

மூனிச் ஒப்பந்தம், பிரிட்டிஷ் ராஜதந்திரத்தைக் காட்டவே யில்லையென்று ஆயிரக்கணக்கானவர் அபிப்பிராயப்படுகிருர்கள். அண்மையில் ராணி மண்டபத்தில் ஸ்ரீ அந்தோனி ஈடன் ஒரு பிரசங்கம் புரிந்தார். ஏராளமான கூட்டம் வந்திருந்தது. சாக்ஸ்டன் ஹாலிலும் ஒரு கூட்டம் நடந்தது. அதிலும் ஏராளமான கூட்டந்தான். மக்களுக்கு யாராவது ஒரு தலைவர் தேவை. ஆனல் அத்தகைய தலைவர் ஸ்ரீ ஈடன் என்று நான் திடமாகச் சொல்லுவதற்கில்லை. மிக இளைஞர். 38-வது வயதில் அந்நிய நாட்டுக் காரியாலயத்தில் புகுந்தார். 41—வது வயதில் வெளிவந்தார். ஸ்பெயினைப் பற்றி மிகப் பிரமாதமான அபிப்பிராயங் கொண்டிருக்கிருர். அது ஒரு புராதன தேசமாம். அது ஜனநாயக நாடாக வேண்டுமா அல்லது சர்வாதிகார நாடாயிருக்கவேண்டுமா என்கிற விஷயத்தை ஸ்பெயின் மக்கள்தான் முடிவு செய்யவேண்டுமே ஒழிய, வேறு யாருந் தலையிடக்கூடாதென்கிருர். இத்தாலி எத்தனையோ முறைகள் ஒப்பந்தத்தை மீறி யிருக்கிறதென்றும், அதனுடன் ஒப்பந்தம் செய்துகொள்வது வீண் மெனக் கேடு என்றும் அபிப்பிராயப்படுகிருர். சுருங்கச் சொன்னல், ஜப்பான்—இத்தாலி—ஜர்மெனி ஆகிய மூன்றும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு விரோதமான தேசங்கள் என்கிற கருத்தோடு பேசுகிருர். அவருடையபிரசங்கங்களைத்தீவிரவாதிகள் விரும்புகிருர்கள்.

---

ஜனவரி 11உ சேம்பர் லேனுக்கு முஸோலினி மாளிகையில்ஒரு விருந்து அளிக்கப்பெறும். அன்று ஒரு நாடகமும் நடைபெறும்.

---

காரைக்குடி நகரசபை

# புயற் சேத நிவாரணத்திற் குதவி!

## கமிஷனர், எஞ்சினீர் மாற்றம்

(நமது நிருபர்)

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டமொன்று 23-12-38 வெள்ளிக்கிழமை மாலை 4 மணிக்கு சேர்மென் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையிற் கூடியது.

தலைவர் உள்பட 12 அங்கத்தினர்கள் விஜயஞ் செய்திருந்தார்கள்.

டெலிபோன் அமைத்தல் சம்பந்தமாக உள்ள கவர்ன்மெண்டு உத்தரவை ரத்து செய்யக்கேட்டுக் கொண்ட கவுன்சில் தீர்மானத்தின் மேல், ஷை உத்தரவை ரத்துசெய்யக் காரணம் யாதுமில்லை என்று தெரிவிக்கும் கவர்ன்மெண்டாரின் உத்தரவை மீண்டும் புனராலோசனை செய்யும்படி சென்னை அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறது என்று தீர்மானிக்கப் பெற்றது.

10-வது வார்டு மெ. மெ. தெருவில் சர்வே நெ. 80,81 இடத்தில் இரண்டு ஓட்டுக் கடைகள் கட்டுவதற்கு கமிஷனரால் அநுமதி கொடுக்க மறுக்கப் பட்டும், ஸ்ரீ தெ. நா. ராம. நா. மெய்யப்ப செட்டியார், அநுமதியின்றி ஷை கடைகளைக் கட்டி முடித்து விட்டு அப்பீல் செய்து கொண்டிருக்கிறபடியால் இவ்விஷயத்தை முடிவு செய்வதற்கு கவர்ன்மெண்டாருடைய அபிப்ராயம் கோரப்படுகிறது என முடிவு செய்யப்பெற்றது.

கொப்புடையம்மன் கோவில் ரதக் கொட்டகைக்கும் பழைய நகர சபைக் கட்டிடத்திற்கும் நடுவிலுள்ள காலி இடம், கல்லுக்கட்டி வடகரைக்குத் தெற்குப் பக்கம் முதலான இடங்களின் அக்கம் பக்கத்திலுள்ள கடைகளுக்கு எந்தச் சமயத்திலும் ஆபத்து நேரிடக் கூடுமாதலால், பிரஸ்தாப இடங்களில் இனிமேல் பட்டாஸ் வியாபாரம் செய்வதற்கு லைசென்ஸ்கொடுக்காமலிருக்கவேண்டுமென்று ஜில்லா மாஜிஸ்திரேட்டுக்கு கமிஷனரால் எழுதப்பெற்ற கடிதம் அங்கீகரிக்கப் பெற்றது.

### எஸ்டிமேட்டுகள்

சுகாதார நிலயத்திலிருந்து பார்க்கின் வாயிலுக்கும் மெர்க்குரி விளக்குக்கும் போகக்கூடிய சர்க்கூட்டை வெட்டி விட்டுத் தனியாக மீட்டர் அமைக்கவும், காரைக்குடி வடிகால் திட்டத்திற்கு சானிடரி எஞ்சினீர் கடிதப் பிரகாரம் மண்ணின் தன்மையைத் தெரிந்து கொள்ள குழிகள் தோண்டவும் முறையே ரூ. 92, ரூ. 45 ஆகிய எஸ்டிமேட்டுகள் அனுமதிக்கப் பெற்றன.

முனிசிபல் ஹரிஜன் விடுதியில் ஒரு கோவில் கட்டியதற்கு ரூ. 250-க்கு அனுமதிக்கப்பெற்ற ரிவைஸ்டு எஸ்டிமேட் சம்பந்தமாய், ஸ்ரீ சி. மு. அரு. நாராயணன் செட்டியாருக்கு அன்னார் வாக்களித்தபடி ஷை தொகையைச் செலுத்தும்படி கமிஷனர் கடிதம் எழுதியும், அனேக ரிமைண்டர்கள் அனுப்பியும் அன்னாரிடமிருந்து பதிலொன்றும் கிடைக்கப் பெறாததால், இவ் விஷயத்தை முடிவுசெய்து பணம் வசூலிப்பதற்கு ஸ்ரீமான்கள் வைஸ்-சேர்மன் செ மு. லெ. மெய்யப்பனம்பலம், பழ. நாச்சியப்பா, ஜனாப் அல்லாபிச்சை அம்பலம் ஆகிய மூவரடங்கிய கமிட்டியொன்று நியமிக்கப் பெற்றது.

### டீவியேஷன் ஸ்டேட்மெண்டு

செக்காலை அண்ணாமலை செட்டியார் வீதியில் ஒரு பாலம் கட்டி கழனி வாசல் ரோட்டுடன் இணைத்ததற்கு ரூ. 711; ஆனந்தா வீதியில் கர்டர் பாலத்திற்கு மேற்கே 5 அடி டயாமீட்டருள்ள பைப் கல்வர்ட்டு கட்டியதன் சம்பந்தமாக ரூ. 751; தேவகோட்டை ரோட்டிலுள்ள ஹரிஜன விடுதியைச் சுற்றி வேலிசெய்ய ரூ. 840; புதுச் சந்தைப்பேட்டைத் தெருவை லாட் ரைட் மெட்டல் செய்ய ரூ. 270 முதலான ரிவைஸ்டு எஸ்டிமேட் தொகைகள் அநுமதிக்கப் பெற்றன.

சிவன்கோவில் தெரு முனிசிபல் பள்ளிக்கூடம் கட்டப்பட்டிருக்கும் இட சம்பந்தமாய் ஷை கோவில் டிரஸ்டியால் அனுப்பப்பெற்றிருக்கும் ட்ராவ்ட் குத்தகைப் பத்திரத்திற்கும், மாஜி கமிஷனரால் அங்கீகரிக்கப் பட்ட ட்ராவ்ட் பத்திரத்திற்கும் மூன்று இருப்பதால் எந்த ட்ராவ்டை அங்கீகரிப்பதென்று ஆலோசனை செய்து முடிவு செய்வதற்காக சேர்மன், ஸ்ரீ. சா. கணேசன், ஸ்ரீ பழ. நாச்சியப்பா ஆகிய மூவரடங்கிய கமிட்டியொன்று நியமிக்கப்பெற்றது.

### நிவாரண நன்கொடை

1938 ஜூலை மாதம் முதல் ஆகஸ்டு முடியவுள்ள கணக்குகளின் சாராம்சமும், வரி வசூல் ஸ்டேட்மெண்டும் ரிக்கார்டு செய்யப்பெற்றன. கிருஷ்ணா, கோதாவரி ஜில்லாக்களில் நடந்த புயற்காற்றினால் சேதமுற்ற ஏழை ஜனங்களை ஆதரிப்பதற்காக ரூ. 100 நன்கொடை அநுமதிக்கப் பெற்றது.

### எஞ்சினீர், கமிஷனர் மாற்றம்

கூட்டத்தின் நடவடிக்கை முடிந்ததும், முனிசிபல் கமிஷனர் ஸ்ரீ ராமதாஸ் நாயுடு எழுந்து மாஜி கமிஷனர் ஸ்ரீ டி. புருஷோத்தமனை இவ்வூருக்கும், தம்மைத் திருநெல்வேலிக்கும் மாற்றியிருப்பதாகத் தெரிவதால் தனக்கு விடையளிக்க வேண்டுமென்று பிரஸ்தாபித்தார். அவ்வாறே எஞ்ஜினீர் ஸ்ரீ ஜி. சி. பொன்னப்பா எழுந்து தன்னையும் மாற்றியிருப்பதாகத் தெரிவதால் தனக்கும் விடையளிக்குமாறு கேட்டுக் கொண்டார்.

### ஸ்ரீ சா. கணேசன்

இவ்விருவர்க்கும் விடையளிக்கு முகத்தான் கட்சித் தலைவர் ஸ்ரீ சா. கணேசன் எழுந்து கூறியதாவது:

'கமிஷனர் ஸ்ரீ ராமதாஸ் நாயுடு வந்ததிலிருந்து நகர சபை சம்பந்தமாக உள்ளே உள்ள வேலைகளை மிகச் சிறப்பாக நடத்தி வைத்திருக்கிறார். இவர் எல்லோரிடமும் மிக அன்பாகப் பேசும் சுபாவம் பெற்றவர். ஏற்கனவே இவர் ரெவன்யூ இலாகாவில் உத்தியோகம் வகித்திருக்கின்றாராதலின், இந்நகர சபையின் பொருளாதார சம்பந்தமாக மிகவும் சிரத்தை கொண்டமை பாராட்டத் தக்கது. மிகக் குறுகிய காலத்தில் நல்ல வேலைகளைச் செய்திருக்கின்றார். தமது சொந்த ஊருக்கு அருகிலுள்ள திருநெல்வேலிக்குப் போகப் போகின்றார். இவர் இன்னும்கொஞ்ச காலத்துக்குள் உத்தியோகத்தினின்று ஓய்வு எடுத்துக்கொள்ள விருப்பதால், தேச சேவையில் ஈடுபடவேண்டுமென்று இவரைக் கேட்டுக்கொள்கிறேன். அவர் வருந்துவதைப் போலவே நாமும் அவர் தம் மாற்றத்துக்கு வருந்துகிறோம். கோயம்புத்தூருக்கு மாறப்பெற்றிருக்கும் ஸ்ரீஜி.சி.பொன்னப்பா, நகர நிர்மாணம்—குறிப்பாக காட்டம்மன் கோவில் பாலம், ஹரிஜன் காலனி முதலானவற்றை பூர்த்தி செய்ததற்கும் மிகவும் சிரத்தை எடுத்துக்கொண்டமை பாராட்டத் தக்கது.'

### சேர்மன்

அடுத்தாற்போல் சேர்மன் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் எழுந்து பேசியதாவது:

'கமிஷனர் இவ்வளவு விரைவில் மாற்றப்பட்டாரென்று இன்றைய தபாலில்தான் தெரிந்தது. இவர் நம்மிடையேவந்து கொஞ்ச காலமேயானாலும் கௌன்சிலர்களிடத்திலும் விசேஷமாக என்னிடமும் அன்புடன் பழகியுள்ளார். இவரும் பழைய கமிஷனர் செய்தாள்ளதைப்போல் நல்ல வேலைகளைச் செய்திருக்கின்றார். பழைய கமிஷனர் வருவதைப்பற்றி நமது மகிழ்ச்சியையும் புதிய சிநேகராகிய இவரது மாற்றத்துக்கு நமது வருத்தத்தையும் தெரிவிக்கின்றோம்.

எஞ்சினீர் ஸ்ரீ பொன்னப்பாவை மாற்ற வேண்டாமென்று அரசாங்கத்தாரை வேண்டியும், அரசாங்கத்தார் ஒத்துக்கொள்ளவில்லை. எனவே வருத்தத்துடன் இவரை வெளியூருக்கு அனுப்புகின்றோம்.'

## நேமம் விவசாயிகட்கு நிவாரணம்

### ஏழ்மை நிலை அகற்ற வேண்டுகோள்

குன்றுக்குடி கிராம காங்கிரஸ் சபை காரியதரிசிகள் ஜனாப் ஏ என். எஸ். காதர் முகைதீன், ஸ்ரீ எம். கிருஷ்ணன் ஆகியோர் எழுதுவதாவது:—

நேமம் கிராமத்தில் சுமார் 200 விவசாயிகளுக்கு மேல் இருக்கின்றனர். இவர்கள் பெரும்பாலும் ஏழை மக்களே. இவர்கள் பல சுற்றுக் கிராமங்களுக்குச் சென்று பிச்சை எடுத்து சாப்பிடுவதுடனல்லாமல் குன்றுக்குடியில் நடைபெறும் விசேஷ தினங்களில் அன்ன தானம் செய்யப்படும் இடங்கட்குச் சென்று ஆகாரம் பெறுகின்றனர். மேலும் தங்கட்கு உடுக்க உடையின்றி கந்தல் துணிகளையே உடுக்கின்றனர். எனவே இவர்கள் நிலைமை மேலும் இவ்வாறு பாதிக்கப் படுமாயின் இறந்துபோவார்கள்.

அனேகமாய்கல்வியறிவற்றவர்களாயிருந்தாலும் இவர்களில் சுமார் 100 பேர் காங்கிரஸ் அங்கத்தினர்கள். முன் பெய்த மழையை நம்பி கையிலிருந்த தானியங்களையும் வயலில் விதைத்து விட்டனர். விளைவில்லாததால் எதிர் காலத்தை எவ்விதம் சமாளிப்போம் என்று ஏங்குகின்றனர்.

ஆகையால் நேமம் கிராம விவசாயிகளின் ஏழ்மை நிலைமையை அகற்றுவதற்கு சர்க்காரும், பக்கத்திலுள்ள ஊர்களில் வதியும் மகா ஜனங்களும் ஆவன செய்யுமாறு பெரிதும் வேண்டுகின்றோம்.





காந்தியடிகளின் 'ஹரிஜன்' கட்டுரை

# விவாதத்தால் நேரத்தை வீணுக்கேல்!

## ஸ்தல ஸ்தாபனங்களைப் புதுப்பிக்க!

### அங்கத்தினர்கட்கு அறிவுரை

பொது மக்கள், பிரயோஜனமற்ற வரிகளையே ஜில்லா போர்டுகள், நகர சபைகள் முதலானவற்றிற்குச் செலுத்துகின்றனரென்றும், இவைகளால் அவர்களுக்கு எவ்விதப் பயனுமில்லையென்றும் அடிக்கடி என்னிடம் சிலர் அறிவுறுத்தி வந்தனர். ஒத்துழையாமை இயக்கத்தின்போது இதன் தத்துவத்தை உணர்ந்தேன். முனிசிபல் சபைகளையும் அல்லது வேறு பெயரால் அழைக்கப்பட்டால் அவற்றையும் ஜனங்கள் பகிஷ்கரித்தார்களேயானால், பின்னர் அவர்கள் தாங்களே தெருவைச் சுத்தஞ் செய்தல், விளக்கு யேற்றுதல், பள்ளிக்கூடங்கள் முதலானவற்றை நடத்திக் கொள்ளலாமென்றும், இவைகளுக்கு அதிகச் செலவாகாதென்றும், இவற்றிற்குப் பேரம் பேசும் தொல்லையுமிருக்காதென்றும் நான் உபதேசித்தேன்.

### சேவைதான் பிரதானம்

சில நாட்கட்கு முன்பு இந்த யோசனையின் தத்துவம் புலனாயிற்று. ஞாத் ஜில்லா போர்டு அங்கத்தினர் ஒருவர் என்னிடம் வந்து போர்டு வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றைக் காண்பித்து அவர்களது திட்டத்தை ஆசீர்வதிக்க வேண்டினார். அத்திட்டம் உத்தியோக முறையைக் கடந்ததாகும். அந்த போர்டில் சுமார் 40 பேர் இருக்கின்றனர். ஞாபக சக்தியைக்கொண்டு இவற்றை எழுதுகிறேன். குறிப்பிட்ட காலங்களில் அவர்கள் கூடி செலவினங்களின் சில பகுதிகளைப்பற்றி விவாதிப்பதைத் தவிர உண்மையில் இவர்களுக்கு வேறு வேலையே கிடையாது. போர்டில் பெரும்பான்மையான காங்கிரஸ் அங்கத்தினர்கள் இருப்பதாலும், சிலர் சேவை செய்ய வேண்டுமென்ற உணர்ச்சியுடையவர்களாயிருப்பதாலும், பொதுஜன சேவைபுரிவதற்குத் தங்கள் அவகாசத்தை எவ்வாறு பயன்படுத்திக் கொள்ளலாமென்பதை அவர்கள் அறிந்து கொள்ளவில்லை. போர்டின் சகல இலாகாக்களையும் சரியான முறையில் வைத்திருக்க இயலாமலும், விசேஷமாக ரஸ்தாக்களை நல்ல நிலைமையில் பரிபாலித்து வைத்துக்கொள்வதற்குப் போதுமான வருமானமில்லாமலும் போர்டின் நிலைமை இருக்கின்றது. 'ஒன்றுஞ் செய்யாவிட்டாலும் ஏதோ கொஞ்சம் செய்வது மேன்மை' என்ற பழமொழிக்கிணங்க, ஏப்ரல் மாதத்தில் வரும் தேசிய வாரத்தில் அங்கத்தினர்கள், உத்தியோகஸ்தர்கள் முதலானோர் ரஸ்தாக்களை மராமத்துச் செய்யும் வேலையில் ஈடுபடுவரென்ற விளம்பரம் அவ் அறிக்கையில் இருந்தது. 'தேசிய வார'த்தில் சேவை செய்ய வேண்டும் என்ற எண்ணம் நல்ல யோசனைதான். ஆனால் அந்த வேலை போதுமானதாக எனக்குத் தோன்றவில்லை.

### வீண் விவாதம் வேண்டாம்

அதற்கு நான் கூறியதவது:—நீங்கள் என்னுடைய ஆசீர்வாதத்தை விரும்பினால் விடுமுறையாகக் கருதும் ஒரு வாரத்தில் மட்டும் வேலைசெய்யாமல் இப்பொழுதே நீங்கள் வேலையை ஆரம்பித்து பதவியிலிருக்கும்வரை தொடர்ந்து வேலை செய்யவேண்டும்; சம்பளம் வாங்குபவர்களைப்போலவே நீங்கள் திரிகரணசுத்தியுடன் வேலை செய்யவேண்டும். உங்கள் வீட்டு வேலைகளையும், மற்ற சொந்த அலுவல்களையும் நீங்கள் கவனிக்கவேண்டாமென்று நான் கூறவில்லை. அவற்றைக் கவனித்த பிறகே தேசிய வேலைகளில் ஈடுபடவேண்டும்.

எந்தச் செலவினங்களை அவசியமாக நிறைவேற்ற வேண்டுமோ அவ்வித விஷயங்களுக்காகவே நீங்கள் கூட வேண்டும். சில்லரை நியமனம், மற்றும் இது போன்ற விஷயங்களுக்காக விவாதிப்பதில் அதிக நேரத்தைச் செலவழிக்காதீர்கள். ஆனால், உங்கள் நிலையான வேலை உத்தியோக முறைக்கு அதிகமாகவே இருக்கும் நீங்களே முதல் தரமான ரஸ்தாக்களை நிர்மாணிப்பதைப்பற்றிப் பெருமைகொள்ள வேண்டும். பின்னர் உங்கள் பள்ளிக்கூடங்களைத் திறம்பட நடத்துவீர்கள். முடிவில் உங்கள் ஜில்லாவில் தக்க ஜல சப்ளை இருக்கின்றதா, நிலங்களுக்குப் போதுமான உரம் போடப்படுகின்றதா, தேச முன்னேற்றத்திற்கான வகையில் பயிர்கள் சாகுபடி செய்யப்பட்டு பிரயோஜனப் படுகின்றனவா என்பனபற்றி நீங்கள் ஆலோசிக்கவேண்டும்.



ஜனங்களுக்கு சுகாதார முறைகளைக் கற்பித்து அவர்களின் கட்குடிப் பழக்கத்தை ஒழிக்குமாறு செய்து நீங்களே மதுவிலக்கை அனுஷ்டிக்க முற்படவேண்டும். வயது வந்தவர்களுக்காக இராப்பள்ளிக்கூடங்களை நடத்தலாம். இச்சேவையில் நீங்கள்மட்டும் ஊக்கத்துடன் இறங்கினால் இன்னும் அதிகப்படியான பேர்கள் இவ் வேலைக்குத் தேவையாகவிருக்கும். இங்ஙனம் சேவை புரிந்தால் நீங்கள் மற்ற போர்டுகளுக்கு வழி காட்டியவர்களாவீர்கள். உங்களைத் தெரிந்தெடுத்தவர்களுக்கும் சந்துஷ்டி யேற்படும். இதன் முடிவு என்னவாகுமென்றால் வாக்காளர்களே தொண்டர் படையினராக மாறி மக்களின் வாழ்வைப் புதுமைப்படுத்த விரைவார்கள். இவற்றிற்கெல்லாம் கையால் பருத்தியை அரைத்தல், வில்லாலடித்துக் கொட்டை நீக்குதல், கையால் நூல் நூற்றல், நெய்தல் இவை அவசியமானவை யென்பது உங்களுக்கே புலப்படும். ஒழிந்த நேரங்களில் இது ஆண், பெண், குழந்தை அனைவருக்கும் வேலையாக அமையும். இதனால் உங்கள் போர்டுக்கு இன்னும் சில லட்ச ரூபாய்களும் அதிகப்படி வருமானமாகக் கிடைக்கும். இவ்வளவையும் நீங்கள் நிறைவேற்றிவிட்டால் அப்பொழுது எனது ஆசீர்வாதம் உங்களுக்கு நிச்சயமாகக் கிடைக்கும். நானே உங்கள் வேலையை உலகறியச் செய்யும் விளம்பர அதிகாரி ஆகிவிடுவேன். இதைச் செய்ய முடியவில்லையென்றால் தேசாபிமானத்தைப்பற்றி வீண் ஆர்ப்பாட்டங்கள் செய்யவேண்டாம்.

இவ்வாறுதான் நான் அவர்களுக்கு யோசனை கூறினேன். நான் மேலே குறிப்பிட்டுள்ள சொந்தச் சேவையை அடிப்படையாகக்கொண்ட திட்டத்தை இந்தியாவிலுள்ள ஜில்லா போர்டுகள் ஏற்கமாட்டா என்று எண்ணுகிறேன்.

### திறமைவாய்ந்தவர்களையே தேர்ந்தெடுங்கள்

ஆகவே திறமையை ஆதாரமாகக் கொண்ட முனிசிபல், ஜில்லாபோர்டு, ஸ்தல ஸ்தாபனங்களை அமைத்து புதிய முறையில் காங்கிரஸ் மாகாணங்களாவது சட்டமியற்றலாமென நான் யோசனை கூறுகிறேன்.

மெம்பர்களைத் தெரிந்தெடுக்கவேண்டியதுதான். ஆனால் நல்ல திறமை வாய்ந்தவர்களாகக் கொஞ்சம் பேர்களிருந்தாலும் எனக்குப் போதுமானது. ஒவ்வொரு மெம்பருக்கும் தனி வேலையுண்டு. தெரிந்தெடுக்கப்பட்ட இந்த மெம்பர்களுடன் ஒத்துழைத்து சம்பளம் வாங்கும் உத்தியோகஸ்தர்களும் வேலைசெய்யவேண்டிய அவசியத்தை நான் வற்புறுத்தவேண்டும். இது, என் சிந்தனையில் ஊசலாடும் போர்டுகளின் சாதாரண விவரமேயாகும்.

காங்கிரஸ் மகாசபை பெருத்த மாறுதல்களைச் சாதிக்கும் ஸ்தாபனமாகும். இதை விரிந்த அர்த்தத்தில் நான் கூறுகின்றேன். ஆகவே அது மற்றவர்கள் செய்யாத காரியங்களைத் தானாகவே யோசித்துச் செய்யவேண்டும். அதன் காரியங்களெல்லாம் அகிம்ஸா தர்மத்தை அடிப்படையாகக் கொண்டவையாக இருக்கவேண்டும். ஒரே மாதிரியில் சிறிய ஸ்தாபனங்களும் பெரிய ஸ்தாபனங்களும் இணைக்கப்படவேண்டும். இவையெல்லாம் ஒரே நோக்கத்தை நிறைவேற்றி வைப்பதற்காக ஏற்பட்டவையாக இருக்கவேண்டும். காங்கிரஸிலுள்ள பலரிடையேயும் ஏகோபித்த கருத்து நிலவினால்தான் இது சாத்தியப்படும்.

---

சென்னை அசெம்பிளியும் கவுன்சிலும் கூடுவதற்கு ஸெயிண்ட் ஜார்ஜ் கோட்டையிலேயே சில கட்டிடங்களை ரூ. 2 லட்சம் செலவில் மாற்றியமைப்பதற்காக வேலைகள் துரிதமாக நடக்கின்றன. அடுத்த ஆகஸ்ட் கூட்டங்கள் கோட்டையிலேயே நடக்கலாம். கோட்டைக்கு வெளியே ஒரு கட்டிடம் கட்டுவதற்கு 20 லட்ச ரூபாய் செலவில் ஒரு திட்டம் போட்டிருந்ததை காங்கிரஸ் மந்திரி சபை பதவியேற்ற பின் சிக்கன முறையைக் கைக்கொண்டு 2 லட்ச ரூபாய்ச் செலவில் இந்நோக்கத்தை நிறைவேற்றுகிறது.

### சிங்கம்புணரி

சிங்கம்புணரி பெற்றோர் சங்கத்தின் ஆதரவில் 20—12—38 மாலை டிஸ்டிரிக்ட் போர்டு உயர்தர ஆரம்பப் பாடசாலையில் டாக்டர் கே. பத்மாவதி அம்மாள் தலைமையில் கொடியேற்று விழா நடைபெற்றது. ஸ்ரீ அ. அ. சேவகப்பெருமாள் பிள்ளை கொடி யேற்றிவைத்தார். டாக்டர் இட்டுப் காந்திஜி படத்தைத் திறந்துவைத்தார். பலர் சொற்பொழிவாற்றிய பின்னர் வந்திருந்தோரனைவருக்கும் சிற்றுண்டி, சந்தனம், தாம்பூலம் முதலியன வழங்கப்பெற்றன.

### வாராப்பூர்

25-12-38 இரவு திருப்புத்தூர் தாலுகா வாராப்பூர் கோவில் முன்பாக ஸ்ரீ கோ. ஜானகிப்பெருமாள் நாயுடு தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. சதுர்வேதமங்கலம் ஸ்ரீ ஆ. சொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை சொற்பொழிவாற்றிய பின் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின.

(1) இவ்வூரில் சுமார் 100 வீடுகளுக்கு மேலிருக்கும் குடிதண்ணீர் வசதி இல்லாமல் விவசாயிகள் கஷ்டப்படுவதால் கிணறு ஒன்று வெட்டிக்கொடுக்கும்படிக்கும், (2) உலகம்பட்டி ரோட்டிலிருந்து படமிஞ்சி மார்க்கமாக திருச்சி ரோட்டில் சேரும்படி ஒரு ரோட்டுப் போட்டுக் கொடுக்கும்படிக்கும் ராமநாதபுரம் ஜில்லா போர்டாரை இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

### அலோர்ஸ்டாரில் ஸ்ரீ வீரப்பா விஜயம்

ரங்கூன் "ஜோதி" மானேஜர் ஸ்ரீ சு. வீர. வீரப்பா 17-12-38 மாலை அலோர்ஸ்டார் ரயில்வே நிலையத்தில் கிட்டா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கத்தினரால் வரவேற்கப்பட்டார். பின்னர் 18-12-38 மாலை கிட்டா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கக் கட்டிடத்தில் தலைவர் ஸ்ரீ சா. அரு. மெ. வள்ளியப்ப செட்டியார் தலைமையில் நடைபெற்றகூட்டத்தில் ஸ்ரீ வீரப்பா 'இன்றைய உலகம்' என்பதுபற்றி சொற்பொழிவாற்றினர். தலைவர்முடிவுரைக்குப் பின் காரியதரிசியால்வந்தனம் கூறப்பெற்று மாலை 5 மணிக்குக் கூட்டம் முடிவெய்தியது.

### படமிஞ்சி

25-12-38அன்று படமிஞ்சி கிராமப் பொதுச்சாவடி முன்பாக ஸ்ரீ வே. மயிலப்ப செட்டியார் தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. பலர் சொற்பொழிவாற்றிய பின் அடியிற்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

(1) பல கிராமங்களுக்கு மத்தியிலுள்ள இவ்வூரில் போர்டு பள்ளிக்கூடம் ஒன்று நிறுவித் தருமாறும்,

(2) சதுர்வேதமங்கலம் ரோட்டிலிருந்து வா. புதூர் ரோட்டில் சேரும்படி ஓர் ரோட்டு போட்டுக்கொடுக்கும்படிக்கும் ராமநாதபுரம் ஜில்லா போர்டாரைக் கேட்டுக்கொள்ளுகிறது.

### காரைக்குடியில் மாளவியா தினம்

25-12-38 மாலை காரைக்குடி காந்தி சதுக்கத்தில் பண்டித மதன் மோகன் மாளவியா பிறந்த தினக் கொண்டாட்டம் ஸ்ரீ எம். ரெங்கநாதன் தலைமையில் நடைபெற்றது.

அவ்வமயம் ஸ்ரீமான்கள் ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியார், ஆவி. லெ. அருணாசலம் செட்டியார், அரு சோமையா, அரு. சங்கரநாராயணன், வஜ்ரவேலு முதலியோர் உபந்யசித்தனர்.

### திருவாடானை தாலுகாவில் காங்கிரஸ் பிரசாரம்

திருவாடானைத் தாலுகாவிலுள்ள ராஜசிங்கமங்கலம், ஆந்தகுடி, பனுவங்காடு, நீர்த்தாண்டதானம், வட்டானம் முதலான கிராமங்களில் டிசம்பர் 2-வது வாரம் முழுதும் காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் பிரசாரகர் திரு. சேதுராமச்சந்திரனால் காங்கிரஸ் பிரசாரம் செய்யப்பெற்றது.

### தமராக்கி

18—12—38 மாலை சிவகெங்கை தாலுகா தமராக்கி மந்தை கோவில் முன்பு, ஸ்ரீ ஏலப்பன் தலைமையில் காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் பிரசாரகர்களானஸ்ரீமான்கள் அ. மாணிக்கம், கே. கிட்டுவய்யர் ஆகியோர் உபந்யசித்தனர்.

### மலாக்கா

நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வர்த்தக சங்கம்

16—12—38 மாலை மலாக்கா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் வர்த்தக சங்கக் கூட்டம் தலைவர் ஸ்ரீ மு. ராம. மு. முத்துராமன் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் நிறைவேறிய தீர்மானங்களாவன:—

1. ஸ்ரீ சு. பழ. ப. மு. விடமிருந்து வந்துள்ள ராஜிநாமா அங்கீகரிக்கப் பெற்றது.

2. சங்கத்தின் ஆறுவது ஆண்டு அறிக்கை தயார் செய்யக் கீழ்க்கண்டவர்கள் சப் கமிட்டி அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ஸ்ரீமான்கள் ப. சி. லெ. அண்ணாமலை செட்டியார், அரு சி. அண்ணாமலை செட்டியார், மு. சி. வி. அரு. அண்ணாமலை செட்டியார், அழ. ராம. அழகப்ப செட்டியார், சா. யி. சிவப்பிரகாசம் செட்டியார்.

3. ஸ்ரீமான்கள் க.வீ.அழ.மு. சிதம்பரஞ் செட்டியார், ராம. அ. ராம. அண்ணாமலை செட்டியார் ஆகியோர் சந்தாப் பாக்கி வசூல் செய்வதற்காக நியமனஞ் செய்யப் பெற்றனர்.

### தென் தஞ்சை ஜில்லா

காங்கிரஸ் காரியதரிசி அறிக்கை

தென் தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி ஸ்ரீ. அ. வேதரத்னம் பின்வருமாறு அறிவிக்கிறார்:—

தென் தஞ்சை ஜில்லாவுக்கு தேர்தல் அதிகாரியாக கோவை. ஸ்ரீ. சுப்ரமண்யம் மாகாணக் கமிட்டியாரால் நியமிக்கப்பட்டிருக்கிறார். அவருக்கு மாகாணக்கமிட்டி ஸ்தானம் முதலியவற்றிற்கு நாமினேஷன் அனுப்புபவர்கள் ஸ்ரீ. கே. சுப்ரமண்யம், தென் தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி மேல்பார்த்து என்ற விலாசத்துக்கு பணமும் நாமினேஷன் பேப்பர் முதலியவைகளை அனுப்பி வைக்க வேண்டும்.

### புளியாலில் பொதுக் கூட்டம்

20-12-38 மாலை தேவகோட்டை இளைஞர் சங்க ஆதரவில் தேவகோட்டைக்கு அருகிலுள்ள புளியால் என்ற கிராமத்தில் திரு. மு. காசிநாதன் தலைமையில் கூடிய பொதுக் கூட்டத்தில் பல தோழர்கள் காங்கிரஸ் மந்திரி சபையின் வேலைகளைப்பற்றி சொற்பொழிவாற்றினர்.



## நோட்டீஸ்

சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

1928ளு O. S. நிர் 224

1938ளு வி. நிர். 81

கனகசபை செட்டியார் வகையரா } 3-முதல் 7-வரை வாதிகள்.

சதுர்வேதமங்கலம் அளகப்பன் அம்பலம் மகன் சின்னக்குப்பான் அம்பலம் } பிரதிவாதி

ஷை நிர். டிக்கிரியில்க் கண்ட ஈடு சொத்துக்களை ஏலத்துக்குக்கொண்டு வரவும் ஏலத்தில் ஷை வாதிகள் கேட்க அனுமதி பெறவும் மனுக்கொடுத்து பிரதிவாதிக்கு ஏல கோட்டீசுக்கு உத்திரவாகி வாயிதா 1939ளு ஜனவரிமீ 17உ ஏற்பட்டிருக்கிறது. பிரதிவாதிக்கு ஆக்ஷேபனை இருந்தால் ஷை வாயிதாவன்று பகல் 10-மணிக்கு ஷை கோர்ட்டார் முன்பாக தெரிவித்துக்கொள்ளவேண்டியது.

M. M. ராமலிங்கய்யர்,
சிவகங்கை, 27-12-38. } வாதி வக்கீல்.

ஊழியன்

பொங்குபுகழ்ப் பாரதத்தாய் பொருந்தமணி முடிபுனைந்து புலவர் போற்றச்
சிங்கஅணை மீதிருந்து தனியரசு செலுத்தியுபர் செங்கோல் தாங்கி
எங்குமொளி வீசஅறம் யாவுகனி வளர்ந்தோங்க இடோன் றில்லா
எங்கள்தமிழ் இனியநறும் மணம்மலர ஊழியமே ஏற்றிட் டேனல்

வெகுதானிய-ஆு மார்கழி-மீ 14-உ (29—12—38) வியாழன்

## தேர்தலில் முறைத் தவறு

திரிபுரம் காங்கிரஸ்ப் பிரதிநிதி தேர்தல் ஜனவரி 8-ம் நாள் நடைபெற வேண்டும். அதற்கு நியமனப் பத்திரம் கொடுக்க நிச்சயிக்கப் பட்டிருக்கும் கடைசி நாள் ஜனவரி 2. இன்று டிசம்பர் 29-உ. ஜனவரி 2-உக்கும் இன்றைக்கும் இடையில் இருப்பது மூன்றே நாட்கள். ஆனால், எல்லா இடங்களிலும் தொகுதி, ஸ்தானம் முதலிய எதுவும் இன்னும் நிச்சயிக்கப்பட்டதாகத் தெரியவில்லை.

ஜில்லா வாரியாக ஸ்தானங்கள் பிரித்தாகிவிட்ட பிறகு இப்படிச் சொல்வது பிசகு எனச் சிலர் சட் என்று கருதலாம். ஜில்லா வாரியாகப் பிரிக்கப்பட்டுவிட்டது உண்மை தான். அது சரியான முறையில் செய்யப்பட்டிருக்கிறதா, தவருன முறையிலா என்று எழுந்த சந்தேகம் இன்னும் நிவர்த்தி செய்யப்படவில்லை. அஃதோர்புறம் இருக்க, ஜில்லாவிற்கு இத்தனை பிரதிநிதியென்ற அளவு மட்டும் தேர்தல் நடாத்தப் போதியதாகுமா?

ஒவ்வொரு ஜில்லாவிற்கும் கிராமத் தொகுதிக்கு இவ்வளவு பிரதிநிதி, நகரத் தொகுதிக்கு இத்தனை பிரதிநிதி என நிச்சயிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை ஜில்லாவுக்குப் பொதுவாக அப்படியே தேர்தல் நடாத்துவது கிடையாது. நகரப் பிரதிநிதிகளை நகர வாரியாகப் பகுக்கவேண்டும். கிராமத் தொகுதிப் பிரதிநிதிகளைத் தாலூகா வாரியாகப் பிரிக்கவேண்டும். பிறகு ஒவ்வொரு தாலூகாவுக்கும் உள்ள அத்தனை ஸ்தானங்களையும் பொதுவாக நடாத்துவதா, அல்லது தாலூகாவைப் பிரித்து கிராமங்களை அங்கத்தினர் கணக்குக்கு ஏற்றவாறு சேர்த்துத் தனித்தனியாக நடாத்துவதா என்பதை நிச்சயிக்கவேண்டும்.

இவ்வேலையைச் செய்யவேண்டிய கடமை யாருடையது? ஜில்லாவுக்குக் கிடைத்த ஸ்தானங்களை நகரக் கமிட்டிகட்கும் தாலூகாக்கமிட்டிகட்கும் ஜில்லாக் கமிட்டி பிரித்துக்கொடுத்து; தாலூகா ஸ்தானங்களைப் பற்றி அந்தந்தத் தாலூகாக்கள் முடிவு செய்வதா? அல்லது ஜில்லாத் தேர்தல் அதிகாரி எல்லாவற்றையும் நிச்சயிப்பதா? இவ்விபரம் விளக்கப்படவில்லை.

காரைக்குடி ஜில்லாச் சம்பந்தப்பட்டவரைக் கமிட்டிகளோ, தேர்தல் அதிகாரியோ எந்த ஏற்பாடும் இது விஷயத்தில் செய்ததாக வெளிப்படவில்லை. தேர்தல் அதிகாரியின் தேர்தல் ஆரம்பவேலை எதுவும் இந்த ஜில்லாவில் இன்னும் தொடங்கப்படவில்லை. இப்படியே இன்னும் பல ஜில்லாக்களிலும் இருக்கக்கூடும். இந்த ஜில்லாவுக்கு நிச்சயிக்கப்பட்ட பிரதிநிதி எண்ணிக்கை பதினெட்டு. அதில் நகரங்கட்கு இரண்டு; கிராமங்கட்குப் பதினறு.

எந்த நகரத்துக்கு எத்தனை; எந்தத் தாலூகாவுக்கு எவ்வளவு என்று இன்னும் பிரிக்கவில்லை. சுமாராகத் திருப்புத்தூர்த் தாலூகாவுக்கு ஒன்பது பிரதிநிதி என்று வைத்துக்கொள்ளுவோம். ஒன்பதுக்கும் ஒரே தேர்தலாக நடாத்துவதா; ஒவ்வொரு ஸ்தானத்திற்கும் ஏற்றவாறு ஊர்களைப் பிரிப்பதா என்பது இனி எப்பொழுது தெரிவது? இதுகூடத் தெரியாமல், எந்த ஊர் எந்தத்தொகுதியைச் சேர்ந்ததென்ற விபரம் ஒன்றுமே புரியாமல் அபேட்சகர் எப்படி நியமனப் பத்திரம் தாக்கல் செய்வது?

இந்த நிலைமையில் நடாத்தப்படும் தேர்தல் சரியானதாக அமையமுடியுமா? இது தேர்தல் ஒழுங்குக்கு முற்றும் ஒவ்வாதது. வேண்டாதவற்றையெல்லாம் விதிகள் என்ற பெயரால் நீளமாக எழுதிக்கொண்டுபோவதில் யாது பயன்?

சென்ற வருஷம் தேர்தலில் நடந்த ஒழுங்கீனங்கள் எண்ணற்றன. பெரிய தவறுகட்கெல்லாம் பரிகாரம் ஏற்படவில்லை. தேர்தல் விதிகள் சரியாக அமைக்கவில்லையென்று ஒரு காரணம் விசாரணைக் கமிட்டியாரால் சொல்லப்பட்டது.

இவ்வருஷம் தேர்தல் தொடங்கு முன்னரே இப்படியிருக்கிறது. ஸ்தானங்களே நிச்சயமாகவில்லை. ஆனல் நியமனத் தேதி வந்துவிட்டது. என்னென்ன நடக்கப்போகின்றன என்பதைப் போகப் போகப் பார்க்கவேண்டும். பெருமை தங்கிய ஸ்தாபனத்தின் பெருமைக்குப் பங்கம் விளைவிக்கத்தக்க காரியங்களே தமிழ்நாட்டில் நடைபெறுகின்றன. தமிழ்நாட்டுக் காங்கிரசின் தற்காலப் போக்கு நன்ருகவில்லை. தேர்தல் ஒழுங்காக நடைபெற்ருலன்றி அது சரியாக அமைவது அருமையே.

## இடி முழக்கம்

—oo:o:oo—

### முகமது டோக்ளக்

முகமது டோக்ளக்கைப்பற்றி வாசகர்கள் நம் தேச சரித்திரப் புத்தகங்களிலே படித்திருக்கலாம். மன்னர் டோக்ளக் நன்கு படித்திருந்தார். பல மொழிகளிலே தேர்ச்சி பெற்றுமிருந்தார். எனினும் அவருக்குச் சிறிது பைத்தியம். எனவே, 'பைத்தியக்கார டோக்ளக்' என்றே வழங்கப்பட்டார். அவருடைய ஆட்சியில் அவர் வேடிக்கையான பல பைத்தியக்காரச் செயல்களைச் செய்திருக்கிருர். ஒன்றைமட்டும் இங்கு கூறுவோம். வெகுகாலமாகத் தலைநகராயிருந்துவந்த டில்லியை மாற்றி, தேவகிரியைத் தலைநகராக்க வேண்டுமென்று விரும்பினர். அதாவது டில்லி ஒரு ஓரத்திலிருக்கிறதென்றும், ஆகையால் தேவகிரியே தற்காப்புக்குச் சிறந்ததென்றும் முடிவு செய்தார். முடிவு என்னவோ சரிதான். ஆனல், டில்லியிலுள்ள பிரஜைகள் அனைவரையும் தேவகிரிக்கு வருமாறு வற்புறுத்த வேண்டியதில்லையல்லவா? இதைத்தான் டோக்ளக் செய்தார். தவிர டில்லிவாசிகளில் ஒருவன் நொண்டி. அவன் நடக்க முடியாமைகண்டு, அவனைக் கட்டியிழுத்துப் பாதி உயிரை பிழக்கும்படித் துன்புறுத்தித் தேவகிரிக்கு அழைத்துச் செல்லவேண்டிய அவசியமென்ன! தேவகிரியின் சீதோஷ்ணம் ஒத்துக்கொள்ளாததை யுணர்ந்து, எல்லா மக்களையும் மீண்டும் டில்லி திரும்பும்படி வற்புறுத்துவானேன்? எல்லாவற்றையும்விட, பாதி உயிர்போன அந்த ஏழைப் பாவி நொண்டியை தேவகிரியிலிருந்து டில்லிக்கு மீண்டும் இழுத்துச் சென்று மீதி பாதி உயிரையும் வாங்கிக் கொன்று தொலைப்பானேன்? இப்போது முஸ்லீம் லீக் கட்சித் தலைவராயுள்ள ஜனப் ஜின்னு, முகமது டோக்ளக்கைப் போன்ற காரியங்களைத்தான் செய்துவருகிருர். டோக்ளக்கின் அறிவாற்றல் ஜனப் ஜின்னுவுக்கும் உண்டு. அதே போல அவருடைய பைத்தியக்காரத்தனத்திலும் ஜனப் ஜின்னு பங்கு கொண்டிருப்பது தான் மிக வேடிக்கை. மகாத்மா காந்தியடிகள் வகுப்பு வாதியல்ல. வகுப்புவாதப் பிரச்னை என்பது பொருளாதாரப் பிரச்னை தான் என்பது பண்டித நேருவின் துணிபு. ஆனல் ஜின்னுமட்டும், இந்தியாவின் அரசியல் பிரச்னையே இந்து-முஸ்லீம் பிணக்கைப் பொறுத்ததென்று கூறி, தாம் இதை சிரத்தையோடு தீர்க்கப் போவதாகப் பறையறைவித்து, இந்தியாவிலுள்ள 36 கோடி மக்களின் கவனத்தையும் தாம் குடியிருக்கும் பங்களாவில் ஈர்த்து, காந்தியடிகளையும் அங்கு வரவழைத்து, அதன் பின்னரும் இவ்விஷயத்தைத் தொடர்ந்து பேசி கடைசியில்,

"முஸ்லீம் லீக்தான் முஸ்லீம்களின் ஏகப்பிரதிநிதி சபை என்பதை காங்கிரஸ் ஒத்துக்கொள்ளாதிருப்பது சரியா? இது முறையா? இது தருமந்தானு?"

என்று ஒரு போடு போட்டார். இந்த மாதிரி ஒரு பைத்தியக்கார விவாதத்துக்கு இந்த ஏழைக் காந்தியடிகளை ஏன் சிரமப்படுத்தவேண்டும்? போதாதகுறைக்கு காங்கிரஸ்மீது சுயநல காரணத்தால் அதிருப்தியுள்ள சகல முஸ்லீம்களையும் திரட்டி, அதற்கு முஸ்லீம் லீக் என்று சொல்லி, வேறு எதைப்பற்றியும் வாய்திறக்காமல், காந்தியடிகள் மீது,

"காங்கிரசைக் கெடுத்தது காந்தியார்தான். அவர் அதை ஹிந்துக்களின் சபையாக மாற்றி, ஹிந்து மதத்தைப் பிரசாரம் புரிந்து வருகிருர். முஸ்லீம்கள் காங்கிரஸ் ஆட்சிக்குக் கீழ்ப்படியக் கூடாது"

என்று வெறி பிடித்துப் பேசுவானேன்? உலக மக்களுக் கெல்லாம், உயர்ந்த ஒரு நீதியைத் தம் வாழ்க்கை மூலம் பரப்ப வந்த ஒரு உத்தமரை, வகுப்பு வாதியெனக் கூறுகின்ற வகுப்பு வாதி, பைத்தியக்கார ஜனப் ஜின்னுவைத் தவிர வேறு யார் இருப்பார்? வேறு யாரால் இப்படித் துணிந்து நாத்தடித்துக் கூற முடியும்? நொண்டியின் உயிரை வாங்கிய மகமது டோக்ளக்கைப்போல, அலுவல்கள் நிறைந்த நேரத்தையும், தளர்ந்த உடலுக்குச் சிரமத்தையும், இந்து-முஸ்லீம் ஒற்றுமையைக் காண உயிர்வைத்திருக்கும் அவருக்கு ஒரு ஆசையையும் காட்டி தம் பங்களாவுக் கெல்லாம் அழைத்துக் கையை விரிப்பானேன்? பெரும் கூட்டத்தைக் கூட்டி காந்தியடிகள் மீது பழி சுமத்துவானேன்?

### மன்னர் மாட்சி

ராஜகோட் சமஸ்தானத்தில் கடந்த ஐந்து மாதங்களாய் நடந்த போராட்டம் எல்லார்க்கும் மகிழ்ச்சிதரும் முறையில் முடிந்திருக்கிறது. தாகூர் சாகேபுக்கும் பிரஜைகளுக்கும் சமரசம் ஏற்பட்டுவிட்டபடியால் இனி சமஸ்தானத்திலே அமைதி நிலவும். சமரஸ ஏற்பாட்டின்படி தாகூர் சாகேப் மிக நேர்மையாகவே நடந்திருக்கிருரெனக் கொண்டு அன்னரைப் பாராட்டலாம். 'நமது பிரஜைகளுக்குக் கூடுமான வரையில் சகல பொறுப்புகளும் இருக்கக்கூடிய சீர்திருத்தங்களை வழங்குவதே' சமரஸத் திட்டத்தின் நோக்கமா யிருக்க வேண்டு மென்று அவர் தெரிவித்திருக்கிருர். சமஸ்தான மன்னரிடம் சில பொறுப்புகள் இருக்க வேண்டுமெனவும், அப் பொறுப்புகள் பிரிட்டிஷ் சர்க்கார் தம்மீது குற்றஞ் சாட்டாதவாறு இருப்பதற்காகவே தம் வசம் இருக்க வேண்டுமெனவும் தாகூர் சாகேப் பகிரங்கமாய்த் தெரிவித்திருப்பது குறிப்பிடத் தக்கது. சமரஸம் இருதயப் பூர்வமானது என்பதை இது நன்கு விளக்கிக் காட்டுகின்றது. சீர்திருத்தத் திட்டத்தை வகுக்கவேண்டிய கடமை பதின்மரைக்கொண்ட ஒரு கமிட்டியிடம் ஒப்படைக்கப்படும். இதில் ஏழு



பேர்கள் பிரஜைகளின் சார்பாக அவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுவார்கள். மீதமுள்ள மூவரும் அதிகாரிகளா யிருப்பர். ஆகவே சகல மக்களுக்கும் திருப்தி ஏற்படும் வகையில் இக் கமிட்டி சீர்திருத்தத் திட்டத்தை வகுக்கும் என்று எதிர்பார்க்கலாம். இது சம்பந்தமாக சமஸ்தானங்களின் பொதுவான போக்கு கவனிக்க வேண்டிய ஒன்ருகும். சென்ற வெள்ளிக்கிழமையன்று பல திவான்கள்கூடி பிரிட்டிஷ்-சமஸ்தான-பிரஜா சம்பந்தத்தைப்பற்றி ஆலோசித்தார்கள். பிரிட்டிஷ் சர்க்கார் சமஸ்தானங்களுடன் சேர்ந்து காங்கிரசை எதிர்க்க மறுத்துவிட்டபடியால், காங்கிரசுடன் தாங்கள் தற்போது சிநேகமாக வேண்டுமென்று முடிவு செய்தார்கள். இது மிகவும் வேடிக்கையான முடிவு; எனினும் 'தற்போது' என்பதைக் கூர்ந்து கவனித்தால் இன்னும் 'பிரிவு' உணர்ச்சி திவான்களிடம் இருப்பதாகவே தெரிகிறது. அந்த உணர்ச்சி மகா கொடிய விஷம். சமஸ்தானங்கள் இரண்டறக் கலந்து ஐக்கியப்பட்டு ஒரே இந்தியாவாயிருக்க வேண்டுமென்பதுதான் காங்கிரஸின் லட்சியம். இதுதான் இறுதியில் நடக்கும்.

———

## சுபாஷ் வரவில்லை

(ட்ரங்க் டெலிபோன்)

சென்னை—

இரவு மணி 10 டிச. 28

**எதிர்பார்த்தபடி ராஷ்ட்ரபதி சுபாஷ் சந்திர போஸ் நேற்றிரவு சென்னை வந்து சேரவில்லை. அவருக்கு உடல் நிலை சரியாயில்லாததால் வார்தாவை விட்டுப் புறப்பட வில்லை யெனத் தெரிகிறது.**

## ஸ்ரீமதி அன்சாரி காலமானர்

காலஞ் சென்ற காங்கிரஸ் தலைவர் டாக்டர் அன்சாரியின் வாழ்க்கைத் துணைவி ஸ்ரீமதி பீகம் அன்சாரி 24—12—38 அன்று டில்லியில் காலமானர்.

## வேலூர்

### செட்டியார் இளைஞர் சங்கம்

வேலூர் செட்டியார் இளைஞர் சங்கத்தின் கூட்டமொன்று 25-12-38 மாலை தலைவர் ஸ்ரீ சுப. முருகப்ப செட்டியார் தலைமையிற் கூடியது. ஸ்ரீமான்கள் சங்கரலிங்கம் பிள்ளை செல்லத்துரை ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

## கோயிலூர்

கோயிலூர் ராஜாஜீ சதுக்கத்தில் 19-12-38 மாலை தலைவர் ஸ்ரீ சுப. சாத்தய்யா தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் கமிட்டிக்கு கட்டிடம் கட்டுவதென்றும், அதற்காக நிதி வசூல் திரட்ட ஆறுபேர் அடங்கிய கமிட்டியொன்று நியமிப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

## கரூர் தாலூகா அரசியல் மகாநாடு

திருச்சி ஜில்லா கரூர் தாலூகா மூன்ருவது அரசியல் மகாநாடு 21-12-38 அன்று வாங்கல் கிராமத்தில் காரைக்குடி முனிசிபல் காங்கிரஸ் கட்சித் தலைவர் ஸ்ரீ சா. கணேசன் தலைமையில் நடைபெற்றது.

மகாநாட்டின் முன்பாக கரூர் ஜனப் அப்துல் ஹமீத் கொடி ஏற்றி வைத்தார்.

ஸ்ரீ எல். கிருஷ்ணசாமி பாரதி எம். எல். ஏ. மகாநாட்டைத் திறந்து வைத்தார்.

காந்தியடிகள் படத்தை நாமக்கல் ஸ்ரீ வெ. ராமலிங்கம்பிள்ளையும் ஜவஹர் படத்தை பழனிச்சாமி கவுண்டரும், சுபாஷ் படத்தை கரூர் முனிசிபல் சேர்மன் ஸ்ரீ சந்திரசேகர ஐயரும் திறந்து வைத்து சொற்பொழி வாற்றினர்.

### பொதுக்கூட்டம்

21-12-38 மாலை கரூர் நதிக்கரை மைதானத்தில் நடைபெற்ற கூட்டத்தில் ஸ்ரீ கிருஷ்ணசாமி பாரதி, காரைக்குடி ஸ்ரீ சா. கணேசன், நாமக்கல் ஸ்ரீ வெ. ராமலிங்கம் பிள்ளை. பழனிச்சாமி கவுண்டர் முதலியோர் சொற்பெருக்காற்றினர்.

## மதுரை—ராமநாதபுரம்

### ஹிந்துஸ்தான் சாரணர் சங்கம்

மதுரை-ராமநாதபுரம் ஹிந்துஸ்தான் சாரணர் சங்கத்தின் ஆதரவில் 6-1-39 மாலை 5-மணிக்கு ஒரு மறுமுறைப் பயிற்சிமுகாம்ஆரம்பித்து 9உ இரவு வரை மதுரை-ராமனதபுரம் ரஸ்தா பிஷர் தோட்டத்தில் நடத்தப்பெறும். மாகாண ஆர்கனைசிங் கமிஷனர் ஸ்ரீ எஸ். ஆர். வெங்கடராமன் முகாம் டைரக்டராக இருந்து பயிற்சி அளிப்பார். முகாம் கட்டணம் சாப்பாடு உட்பட நபர்ஒன்றுக்கு ரூ. 2-8-0.

## தென் தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி

3-1-39 பிற்பகல் 2 மணிக்கு வேதாரண்யத்திலுள்ள தென் தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியாலயத்தில் ஷை ஜில்லாக் கமிட்டியின் கூட்டம் நடைபெறும். அவ்வமயம் கீழ்க்கண்ட விஷயங்கள் ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளப் பெறும்.

1. பட்டுக்கோட்டையில்நகரக் காங்கிரஸ் கமிட்டி ஏற்படுத்துதல்.

2. சத்தியாக்ரக ஞாபகார்த்தக் கட்டிடத்துக்கு பொருளுதவி செய்யுமாறு எல்லாக் கமிட்டிகளுக்கும் வேண்டுகோள் விடுக்க வேண்டுமென்ற வேதாரண்யம் நகரக் காங்கிரஸ் கமிட்டியாரின் கடிதம்.

## தபால் பை களவு

வடஇலையாத்தக்குடியைச் சேர்ந்த லட்சுமணன் என்பவர் மீது சென்ற செப்டம்பர் மத்தியில் தபால் பை களவு சம்பந்தமான ஓர் வழக்கு கொண்டுவரப்பட்டது. திருப்புத்தூர் சப் மாஜிஸ்திரேட் எதிரி இ. பி. கோ 506-வது பிரிவுப்படி குற்றஞ் செய்திருப்பதாகக் கண்டு அவருக்கு 9-மாதக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

———

50 கோடி ரூபாய் மூலதனமுள்ள பம்பாய் ஆமதாபாத் ஆலைகள் சுமார் 1,75,000 பேருக்குப் பிழைப்பளிக்கின்றன.

* •

25 லட்சம் ரூபாய் மூலதனமுள்ள அகில பாரத சர்க்கா சங்கம் 160,000 பேருக்கு பிழைப்பைத் தருகின்றது.

## பர்மா கலக விசாரணைக் கமிட்டி

பர்மா கலக விசாரணைக் கமிட்டியேனன் கஞ்சிலும், இன்னும் சில இடங்களிலும் 92 சாட்சிகளையும், பகாகூலில் 52 சாட்சிகளையும் விசாரித்துவிட்டு சசாய்க் வந்திருக்கிறது.

## கள்ளுக்கு விடுவதில்லை

சமீபத்தில் ஜனப் அப்துல் காதர் தலைமையில் கூடின மதுரை ஜில்லா போர்டு கூட்டத்தில் தென்னை, பனை மரங்களையும் கள் குத்தகைக்கு விடுவதில்லை என்று தீர்மானிக்கப்பெற்றது. இதனல் போர்டுக்கு சுமார் ரூ. 5000 வரை வருமானக் குறைவு ஏற்படலாம். இந்தத் தீர்மானம் காங்கிரஸ் கொள்கையைப் பின்பற்றிச் செய்யப்பட்டுள்ளது.

## சென்னை சங்கீத மகாநாடு

சென்னை 12-வது சங்கீத மகாநாடு 23-12-38 மாலை ராயப்பேட்டையில் ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் தலைமையில் நடைபெற்றது. மைசூர் யுவராஜா மகாநாட்டைத் திறந்து வைத்தார்.

## காந்தி சேவா சங்கம்

காந்தி சேவா சங்கத்தின் 5-வது மகாநாடு பீகார் மாகாணத்திலுள்ள சம்பரான் ஜில்லாவிலுள்ள பிருந்தாவன் ஆஸ்ரமத்தில் எப்ரல் 16உமுதல் 26 வரையில் நடைபெறும்.

## அ இ. கா. காரியக் கமிட்டி

ஜனவரி 7-தேதி கூடவிருந்த அ. இ. கா. காரியக்கமிட்டி ஜனவரி 11உ அல்லது 12உயில் பர்தோலியில் கூடுமென்று தெரிகிறது.

## கவியரசியும் திருவாட்டிகளும்

சுமார் ஒரு மாதத்துக்கு முன் ஹிந்தி எதிர்ப்புத் திருவாட்டிகள் சிலர் கைதியாகி வேலூர் சிறையில் இருந்தனர். அவர்களுக்கு விதித்த ஒரு மாதத் தண்டனை முடிந்ததும் அவர்கள் முறைப்படி விடுதலையாயினர். ஆனல் ஹிந்தி எதிர்ப்புக் காரர்கள் விஷயந்தான் தெரியுமே; ஐந்து பேர்கள் சேர்ந்துவிட்டால் ஒரு 'மகா நாடு' என்று! வேலூர் சிறையிலிருந்து வெளி வந்த திருவாட்டிகள் ஐவர் சமீபத்தில் மாதர் மகாநாடு நடத்தி வேலூரில் ஹிந்தியை எதிர்த்தார்கள்.

தமிழறிஞர்களுடைய வரலாறுகளை ஒருவருமே போற்றுவதில்லை யென்பது அத் திருவாட்டிகளின் மகாநாட்டிலே சொல்லப்பட்ட புகார். இது கேட்டு ஒருவர் 'தமிழுக்காகச் சிறை சென்ற திருவாட்டிகளுடைய வரலாற்றை எழுதட்டுமா?' என்று கேட்கிருர். அப்புத்தகத்துக்கு 'இந்தியத் தாய்' எனும் நூலின் ஆசிரியை மிஸ் மேயோ தான் முகவுரை எழுதவேண்டும்.

ஆனல் கவியரசி சரோஜனி சென்னையிலிருந்து கராச்சிக்குப் போய், ஹிந்தியைப் புகுத்தியதற்காகச் சென்னை சர்க்காரைப் பாராட்டியிருக்கிருர். திருவாட்டிகள் இதைப் பார்ப்பார்களா?

———

வேலூரில் நடந்த ஹிந்தி எதிர்ப்பு மாதர் மகாநாட்டில், ஸ்ரீ ஈ. வெ. ரா. சிறைசென்றது குறித்து ஒரு அனுதாபத் தீர்மானம் நிறைவேறியது.

—'விடுதலை'

திருவாரூரில் நடந்த ஹிந்தி எதிர்ப்புப் பொதுக்கூட்டத்தில் ஸ்ரீ ஈ. வெ. ரா. சிறைசென்றமை குறித்து ஒரு பாராட்டுத் தீர்மானம் நிறைவேறியது.

—ஷை பத்திரிகை.

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திலிருந்து பினங்குக்குப் புறப்படுதல்

கப்பல்கள் நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா | 31-12—38 |
| ரோனு | 13—1—39 |
| தலம்பா | 28—1—39 |

### வருதல்

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகபட்டினத்துக்கு வரும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரோனு | 5—1—39 |
| ரஜூலா | 19—1—39 |

புதுச்சேரியிலிருந்து சிங்கப்பூர் மார்க்கம் செய்கோன் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| போர்தஸ் | 17—1—39 |

## சென்னை மார்க்கெட்

சென்னை, டிச. 24—

| | |
|---|---|
| சவரன் மொத்தம் | 23-14—6 |
| „ சில்லரை | 23-14—9 |
| பம்பாய் ஆலைத் தங்கம் | 37—2—0 |
| „ தவணை | 37—4—4 |
| முசை தோலா 1-க்கு | 36-12—0 |
| வெள்ளி (ரெடி) | 52—4—0 |
| „ தவணை | 51-14—0 |
| „ 1 ரூபாய் எடை | 0—8—6 |

## ரெங்கூன்

டிச. 21—

### நெல்

| | |
|---|---|
| நசைன் நெல் | 79—80 |
| கவ்ஜின் மீடோன் | 82—83 |

### புது அரிசி

| | |
|---|---|
| பெரியமில் ஸ்பெஷல் ரூ. | 182—0—0 |
| சிறிய மில் நசைன் | 191—0—0 |
| நசைன் எஸ்கியூ | 200—0—0 |
| புழுங்கல் அரிசி | 220—0—0 |
| மில்ச்சார் | 237—0—0 |

## பினங்கு

பினங்கு, டிச. 8–

| | | |
|---|---|---|
| தவணை வட்டி | | 0-4-0 |
| ரப்பர் பீக்கல் 1-க்கு | $ | 36-00 |
| ஈயம் „ „ | $ | 110-50 |
| கொப்பரா „ | $ | 3-55 |
| உண்டியல் விலை மதருஸ் ரெங்கூன் | ரூ. | 155 ¼ |
| „ மைடான் கிலிடர் | | 99 3/8 |
| „ செய்கோன் டாலர் | | 204 1/8 |
| „ பேங்காக் திக்கல் | | 125 00 |

## சிங்கப்பூர்

சிங்கப்பூர், டிச. 10—

| | | |
|---|---|---|
| தவணை வட்டி கார்த்திகைமீ | | 0-3-6 |
| ரப்பர் விலை பவுண்டு 1-க்கு | | 27-3/8 |
| ஈயம் விலை பீக்கல் 1-க்கு | | $ 109-00 |
| கொப்பரா காய்ந்தது | $ | 3·35 |
| கொப்பரா கலப்பு | $ | 3·05 |
| உண்டியல்விலை இந்தியாவுக்கு | | 155-3/4 |
| „ செய்கோனுக்கு | | 204-1/2 |
| „ மைடானுக்கு | | 98-3/4 |

## செய்கோன்

செய்கோன், டிச. 24—

| | |
|---|---|
| தவணை வட்டி கார்த்திகைமீ | 0-4-0 |
| நெல் விலை பீக்கல் 1-க்கு $ 3·55-லிருந்து | $ 3·60 |

### உண்டியல் விலை

| | |
|---|---|
| இந்தியாவுக்கு $ 100-க்கு ரூ. | 75 3/8 |
| சிங்கப்பூருக்கு „ | $ 48 3/8 |

## உள்ளூர் சினிமாக்கள்

**ஸ்ரீ ராமவிலாஸம்:—**
'அரபியர் யுத்தம்' என்னும் உருதுப் படம் நடக்கின்றது.

**ஸ்ரீ கிருஷ்ணு:—**
'பக்த நாமதேவர்' என்னும் தமிழ்ப் படம் நடக்கின்றது.

**நடராஜா:—**
'ஈாபுக்வாலி' என்னும் ஹிந்திப்படம் நடக்கின்றது.



## ராஜ்கோட்—பிரஜாகோட் ஆகிறது

சென்ற சில மாதங்களாக பிரஜை களுக்கும், சமஸ்தான அதிகாரிகளுக் கும் போராட்டம் நடந்து வந்தது. அநேக பிரஜா கட்சித் தலைவர்களும் தொண்டர்களும் கைது செய்யப் பட்டனர்.

இப்பொழுது, டிசம்பர் 26உ அன்று ராஜ்கோட் அரசர் தாகூர் சாகிப் சர்தார் படேலை சமரஸத்திற்கு அழைத்து சுமார் 8 மணி நேரம் சம் பாஷித்து ஒரு முடிவுக்கு வந்தார். சர்தார் படேல் இதில் வெற்றிக் கொடி நாட்டினர். சுபாஷ் சந்திர போஸ் படேலைப் பெரிதும் பாராட்டி, மனப்பூர்வமாகப் புகழ்ந்தார். போராட்டத்தில் ஈடுபட்டு வெற்றி யடைந்த ராஜ்கோட் பிரஜைகளையும் பாராட்டினர்.

பின்னர் தாகூர் சாகிப் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்:-

சமஸ்தானப் பிரஜைகளும், சமஸ்தான ஊழியர்களுமடங்கிய 10 பெரியார்களைக் கொண்ட ஒரு கமிட்டி நியமிக்கப்படும்.

ஜனவரி மாதத்திற்குள் இக் கமிட்டி சரியாக விசாரணை செய்து பிரஜை களுக்கு ஓரளவு பொறுப்பாட்சி உள்ள வகையில் சீர்திருத்தங்கள் வழங்கப் படும். எல்லா ராஜீயக் கைதிகளும் விடுவிக்கப்படுவார்கள்.

அபராதங்கள் எல்லாம் திருப்பிக் கொடுக்கப்படும்,

பிரிட்டிஷ் இந்தியாவில் பிரிட்டிஷ் இந்தியருக்கு என்ன சலுகைகள் உண்டோ, அவ்வனைத்தும் சமஸ்தா னத்திலுள்ள சமஸ்தான பிரஜைகளுக் கும் அளிக்கப்படும்.

## கிட்டா நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கம்

வெகுதானிய௵ கார்த்திகை மீ 27-ந் தேதி (12-12-38) இரவு மேற் படி சங்கக் கூட்டம் அலோர்ஸ்டாரி லுள்ள சங்கக் கட்டிடத்தில் தலைவர் ஸ்ரீ சா. அரு. மெ. வள்ளியப்ப செட் டியார் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் நிறைவேறிய தீர்மானங்க ளாவன:—

மத்திய இந்திய சங்கத்திலிருந்து திரு. சத்தியமூர்த்தி மலாய் நாட் டிற்கு விஜயம்செய்யும் விஷயமாய் திரும்பவும் பொருள் உதவி கோரியும், எந்த விஷயங்களைப்பற்றி பிரசங்கம் செய்வதென்பதையும் தெரிவிக்குமாறு வந்த கடிதம் யோசிக்கப்பெற்று நம் சங்கத்தின் சார்பாக 50 றிங்கி பொரு ளுதவி செய்வதெனவும், அன்னார் இவண் வருங்காலை இந்தியாவின் தற் கால காங்கிரஸ் சர்க்கார் ஆட்சி முறையைப்பற்றி ஆங்கிலத்திலும், சென்னை மாகாணத்தின் காங்கிரஸ் ஆட்சி முறையைப்பற்றி தமிழிலும் பேசவேண்டுமென ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு மத்திய சங்கத்தின் மூலமாகத் தெரிவிப்பதற்கு ஏற்பாடு செய்வதென்று தீர்மானிக்கப்பெற் றது.

# ராஜபாளையத்தில் மகா நாடுகள்

### அரசியல் மகாநாடு

40 வது மாகாண அரசியல் மகா நாடு ராஜபாளையத்தில்நாளை(30-12-38) மாலை 2-30 மணிக்கு ஸ்ரீ ஓமாந்தூர் ராமசாமி ரெட்டியார் தலைமையில் ஆரம்பமாகும். ராஷ்டிரபதி சுபாஷ் சந்திரபோஸ் மகாநாட்டைத் திறந்து வைப்பார். கனம் கிரி தேசியக் கொடியை ஏற்றி வைப்பார்.

சென்னை மந்திரிகள் ராஜாஜி, டி. பிரகாசம், டாக்டர் ராஜன், வி. ஐ. முனிசாமிப் பிள்ளை, எஸ். ராமனாதன் ஆகியோர் 29உயே ராஜபாளையத் திற்கு விஜயஞ் செய்வார்களென்று தெரிகிறது.

### வசதிகள்

பிரதிநிதிகளுக்கு, ரயில்வே பிடர் ரோடிலுள்ள ஹைஸ்கூலில் ஜில்லா வாரியாகத் தனி ஜாகைகள் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன. பார்வை யாளர்கள் தங்கவும் வசதிகள் செய் யப்பட்டுள்ளன.

பஸ் சர்விஸ்காரர்கள் ஸ்பெஷல் ட்ரிப்புகள் அனுமதிக்கவும் அதிகப்படி பஸ்கள் விடவும் சம்மதித்திருக்கின் றனர். டிசம்பர் 29உ முதல் ஜனவரி 1உ வரைக்கும் 5 ஸ்பெஷல் ரயில் வண்டிகள் விடவும், ரயில்வே ஸ்டேஷன்களில் வசதிகள் செய்துகொடுக்கவும் ரயில்வே அதிகாரிகள் ஒப்புக்கொண் டிருக்கின்றனர்.

ஸ்பெஷலாக மூன்று டாக்டர்களும், சிப்பந்திகளும் மருந்துகளுடன் வைத் திய சிகிச்சைக்குத் தயாராயிருப்பார் கள். சுகாதார வசதிகளும் கவனிக் கப்படும்.

குளிப்பதற்கான வசதிகளுள்ள ஸ்நானக் கட்டடங்கள் அமைக்கப்பட் டிருக்கின்றன. கக்கூஸ்கள் தக்க வசதி களுடன் அமைக்கப்பட்டிருக்கின்றன.

காங்கிரஸ் நகர் முழுவதும் மின் சார விளக்குகளால் அலங்கரிக்கப் பட்டிருக்கின்றன.

தபால் வசதிகளும், பொருள் பாது காப்புக்காக பாங்க் வசதிகளும் செய் யப்பட்டுள்ளன. போஜன சாலைகளும் அநேக சௌகரியங்களுடன் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன. 30,31உ ஆகிய இருநாட்கட்கும் சாப்பாட்டுக்கு ரூ 1 வீதம் வசூலிக்கப்படும்.

### பிரவேசக் கட்டணம்

(1) நன்கொடையாளர்: ரூ. 5-க்கு மேல் கொடுப்பவர்கள். (2) வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர்: ரூ. 5-0-0. (3) பிரதிநிதிக் கட்டணம் (சாப்பாடு உட் பட) ரூ. 2-0-0. (4) பார்வையாளர் அணா 8. (5) பெண் பார்வையாளர் அணா 4.

தமிழ் மாகாண அரசியல் மகாநாட் டின் விஷயாலோசனைக் கமிட்டிக் கூட் டம் இன்று (29-12-38) மாலை ஸ்ரீ ஓமாந்தூர் ராமசாமி ரெட்டியார் தலைமையில் நடைபெறும்.

ஸ்தல ஸ்தாபன காங்கிரஸ் மெம்பர் கள் மகாநாடு இன்று மாலை 3-மணிக்கு ஸ்ரீ பக்தவத்சலம் தலைமையில் நடை பெறும். கனம் கோபால் ரெட்டி மகாநாட்டைத் திறந்து வைப்பார்.

அபேதவாதிகள் மகாநாடு இன்று ஸ்ரீமதி கமலா தேவி சடோபாத் தியாயா தலைமையில் நடைபெறும். மலையாளம் ஏ. கே. கோபாலன் மகாநாட்டைத் திறந்து வைப்பார்.

ஹிந்தி பிரசாரர்கள் மகாநாடு நாளை (டிசம்பர் 30உ) ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமன் தலைமையில் நடை பெறும்.

விவசாயிகள் மகாநாடு ஸ்ரீ என். ஜி. ரங்கா தலைமையில் நடைபெறும்.

தொழிலாளர் மகாநாடுஸ்ரீ முத்துராம லிங்கத் தேவர் தலைமையில் நடை பெறும்.

சமஷ்டி எதிர்ப்பு மகாநாடு ஸ்ரீ ஜீவா னந்தம் தலைமையில் நடைபெறும்.

கிராம அதிகாரிகள் மகாநாடு, சிறை சென்ற தியாகிகள் மகாநாடு ஆகியவைகளும் அரசியல் மகா நாட்டை யொட்டி நடைபெறும்.

## ரங்கூன் கலவரங்கள்

பர்மாவைச் சேர்ந்த பல இடங்களில் ஊர்வலங்கள் நடத்தப்பெற்று சட்டங் கள் மீறப்பட்டன.போலீஸ் லத்திப்பிர யோகத்தால் சுமார் 100 மாணவர் களுக்குக் காயம் ஏற்பட்டது. மறியல் செய்தவர்களை போலீஸார் லத்தியால் தாக்கவே, சுமார் 40 பையன்கள் படு காயமடைந்தனர்.

'பர்மா பர்மியருக்கே' என்ற கட்சி யைச் சேர்ந்த 6 மெம்பர்கள் கைது செய்யப்பட்டனர். ஊர்வலங்கள் நடத்துவதை சர்க்கார் ஒருவாரத் திற்குத் தடை செய்தனர். ராணுவம் காவல் புரிந்தது.

பொங்கிகள் ஊர்வலம் நடத்து வதில்லை என்று தீர்மானித்து, தங்கள் அபிப்பிராயத்தை சர்க்காருக்குத் தெரி விக்க முடிவு செய்தனர். அரசியல் ஆர்பாட்டங்களைத் தடைசெய்து புதிய உத்திரவு ஒன்று பிறப்பிக்கப்பட்டது. அகில பர்மா மாணவர் சங்கத்தின் உப-தலைவர் மீதும், மூன்று சட்ட மெம்பர்கள் மீதும் நடவடிக்கை எடுக் கப்பட்டது. செனட் உப-தலைவர் தன் பதவியை ராஜீநாமாச் செய்துவிட்டார். கவர்னரும் மாந்தலேக்குத் திரும்பி னார்.

ரங்கூன் நகரத்தில் அவசரப் பாது காப்புச் சட்டத்தை கவர்னர் அமு லுக்குக் கொண்டு வந்திருக்கிறார். இதன் பிரகாரம் போலீஸ் உத்தியோ கஸ்தர்கள் எவரையும் வாரண்டில்லா மல் கைது செய்யலாம்.

பல ஜில்லா நகரங்களிலும் சட்டங் கள் மீறப்படுகின்றன, 'பர்மா பர்மிய ருக்கே' என்ற கட்சியைச் சேர்ந்த மூவருக்கும், மாணவர் சங்கத் தலைவர், உப-தலைவர் இருவர்களுக்கும் தலா மூன்று மாத வெறுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டுள்ளது. மற்ற இருவருக்கும் தலா 100 ரூபா அப ராதமும், தவறினால் 2 மாத சிறைத் தண்டனையும் விதிக்கப்பட்டது.

## காங்கிரஸ் கெட்டது காந்தியடிகளால்!

### ஜின்னாவின் வகுப்புவாத வெறி

அகில இந்திய முஸ்லீம் லீக்கின் மகாநாடு சமீபத்தில் பாட்னாவில் ஸ்ரீ ஜின்னா தலைமையில் கூடிற்று. அவர் ஆரம்ப முதல் கடைசி வரையில் காங்கிரஸைத் தாக்கியே பேசினர். அவர் கூறியதாவது:—

இந்தியாவிலுள்ள 8 கோடி முஸ் லீம்களும் முற்போக்கின்றி வாழ்தல் கூடாது. அவர்கள் காங்கிரசுக்கோ, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கோ, அல்லது பிறருடைய ஆட்சிக்கோ கட் டுப்பட்டு வாழக்கூடாது. ஹிந்து-முஸ் லீம் ஒற்றுமைப் பேச்சுகள் காங்கிர ஸின் பாஸிஸப் போக்கினாலேயே முறி ந்து விட்டன. வந்தேமாதரக் கீதத்தை எல்லோரும் பாடவேண்டும் என்று வற்புறுத்தல், வார்தாகல்வித் திட்டம், பொது ஸ்தாபனங்களில் காங்கிரஸ் கொடியைப் பறக்கவிடுதல் போன் றவை காங்கிரஸின் பாஸிஸப் போக் கையும், காங்கிரஸ் ஹிந்துக்களின் ஆட்சியையே இந்தியாவில் ஸ்தாபிக்க விரும்புகிறது என்பதையும் தெளி வாக்குகிறது.

ஹிந்துக்களுக்கு உண்மையான தேசிய உணர்ச்சி ஏற்பட்டிருப்பது போலவே, முஸ்லீம்களும் தேசிய உணர்ச்சியுடன்முன்வர எழுதல்வேண் டும். சமஸ்தான மக்களை காங்கிரஸ் சுய நலத்துக்காகவே தூண்டிவிடுகிறது. வருங்கால சமஷ்டி அரசியலில் அதிக ஸ்தானங்களை வகிக்கவேண்டு மென்ற நோக்கத்துடனேயே சமஸ் தானங்களுள் பொறுப்பாட்சி கிளர்ச்சி யைத் தூண்டிவிடுகிறது.தனக்கு மெஜா ரிட்டி ஸ்தானங்கள் கிடைக்குமென்று தெரிந்தால், காங்கிரஸ் சமஷ்டியையும் ஏற்கும். அபுல் கலாம் ஆஸாத் போன்ற சில முஸ்லீம்கள் காங்கிர ஸில் சேர்ந்திருப்பினும், காங்கிரஸ் முஸ்லீம்களுக்கு பிரதிநிதித்வம் வாய்ந்த சபை என்று சொல்ல முடி யாது. அவர்களைப் பின்பற்றி எந்த முஸ்லீமும் காங்கிரஸ் கட்சியில் சேரக் கூடாது. முஸ்லீம் லீகே முஸ்லீம்களை பிரதிபலிக்கும் ஒரு மகாசபை.

ஹிந்துக்களின் கலாசாரத்தைப் பரப்ப வேண்டுமென்ற நோக்கத் துடன் தான் காந்தியடிகள் காங் கிரசின் அடிப்படையான கோள் கைகளை யெல்லாம் அறவே ஒழித்து, அதை ஓர் ஹிந்துக் களின் ஸ்தாபனமாக மாற்றி யமைத்துள்ளார்.





## தேவகோட்டை நகரக் காங்கிரஸ் கமிட்டி

25—12—38 அன்று தேவ கோட்டை நகரக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் உபதலைவர் ஸ்ரீ. சித. மு. மாரி யப்பா தலைமையில் நடைபெற்றது. நிறைவேறிய தீர்மானங்களாவன:—

(1) மாகாண காங்கிரஸ் கமிட்டி யினரின் அறிக்கைக்கு இணங்க இத் தாலுகாவின் கீழ்சட்டசபை அங்கத் தினரையும், மேல் சட்டசபை அங்கத் தினரையும் சட்டசபை நடவடிக்கை களை அவ்வப்போது இத்தொகுதியில் பிரசாரம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறது.

(2) தேவகோட்டை தாலுகாவில் மழை பெய்யாததை உத்தேசித்து நஞ்சைப் பயிர்கள் முழுமையும் சாவி யாகப் போய்விட்டதை யுத்தேசித்து நிலவரி தருந்த அளவு குறைக்கவேண்டு மென்று சர்க்காரைக் கேட்டுக்கொள் கிறது.

(3) சென்னை சர்க்கார் கொண்டுவந் திருக்கும் மலையாள ஆலயப்பிரவேச மசோதா, ஜமீன்குடிகளின் நிலவரி சீர் திருத்த மசோதா முதலியவற்றை இக் கமிட்டி முழுமனதுடன் வரவேற் கிறது.

## அரியக்குடி

### மகாத்மா வாசகசாலை

26-12-38 மாலை அரியக்குடி மகாத்மா வாசகசாலைக் கட்டிடத்தில் தலைவர் ஸ்ரீ சா. ராம. சித. ராமசாமி செட்டியார் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் முடிவான விஷயங்களா வன:—

1. ராஷ்ட்ரபதி சுபாஷ்சந்திரபோஸ் காரைக்குடிக்கு விஜயம் செய்யும் போழ்து அன்னார்க்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுக்க வேணு மென்று தீர்மானிக்கிறது.

2. இவ் வாசகசாலைக்கு நன்கொ டையாக புத்தகங்கள் வழங்கியவர் கட்கு இக் கூட்டத்தின் நன்றியைச் செலுத்துகிறது.

## நேமம் கோவில் நகரத்தார் கூட்டம்

வெகுதானிய௵ மார்கழி மாதம் 4-உ (19—12—38) நேமம் கோவில் நகர விடுதியில் ஷை கோவில் நகரத் தார் கூட்டம் நடைபெற்றது. 21 ஊர் களிலுமிருந்து நகரத்தார்கள் வந்தி ருந்தனர். பிரஸ்தாப ஊர்களிலுள்ள புள்ளி விகிதாச்சாரப்படி 25 அங்கத் தினர்கள் கொண்ட கமிட்டி ஒன்று கோவில் காரியங்களை நிர்வகிப்பதற்கு நியமிக்கப்பட்டது. அதில் ஐந்து பேர் கள் கொண்ட காரியக்கமிட்டி ஒன்று தேர்ந்தெடுக்கப்பெற்று முறையே நிர் வாகத்தைக் கவனித்து வருவதென் றும்,ஆண்டுக்கு ஒரு முறை நகரத்தார் மகாசபைக் கூட்டம் நடைபெறலா மென்றும் தீர்மானிக்கப்பெற் றது. எண்டோமெண்டு போர்டார் நோட்டீஸ் விஷயம் ஆலோசிக்கப் பெற்று போர்டாருக்கு (கமிட்டி) கவ னித்து பதில் கொடுப்பதென்று முடிவு செய்யப் பெற்றது.

## கோட்டையூர்

கோட்டையூர் போர்டு உயர்தர பாடசாலையின் மாணவர்களின் சங்கக் கூட்டம் 23-12-38 காலை ஸ்ரீ லெ. அ. மு. முத்தையா செட்டியார் தலைமை யில்கூடிற்று.கோட்டையூர் முத்தையா செட்டியார் ஆஸ்பத்திரி டாக்டர் ஸ்ரீ. சாம்பமூர்த்தி அய்யர் காலஞ்சென்ற தைக் குறித்து அநுதாபத் தீர்மானம் நிறைவேற்றப் பெற்றது. பிறகு பாட சாலையின் தலைவரால் ஹரிஜனக் குழந் தைகட்கு புதிய உடை, சோப் முதலி யன வழங்கப் பெற்றன.

## காரைக்குடி தாகூர் வாசகசாலை

25—12—38 காலை காரைக்குடி தாகூர்வாசகசாலையில் ஸ்ரீ. ராம. சிதம் பரம் கொடியேற்றுவித்தார். மாலையில் ஸ்ரீ. ரா. கோபாலகிருஷ்ணய்யர் தலை மையில் நடைபெற்ற கூட்டத்தில் ஸ்ரீ மான்கள் பி. பாக்கியம், டி. பி. கோவிந்தசாமிராவ், எஸ். தேவராஜன், பழ. மெ. பெரி. மெய்யப்பா, குமர. சோமசுந்தரன், ஆ. சுப்பையா, நா. பால சுப்ரமணியம், லெ. சுப்பிரமணி யன், பழ. பழனியப்பன் ஆகியோர் பேசினர்.



## காளையார்கோவில்

22-12-38 இரவு காளையார்கோவில் ஸ்ரீ. ராமகிருஷ்ண பரமஹம்ச வாசக சாலையின் கூட்டமொன்று ஸ்ரீ அ. பொ. ஜம்புகேஸ்வர பாண்டியம்பிள்ளை தலைமையில் நடைபெற்றது. முடிவான விஷயங்களாவன:-

(1) வாசகசாலை உதவிக்காரியதரிசி ஸ்ரீ வெ. மு. ரங்கசாமியின் ராஜிநாமா ஒப்புக்கொள்ளப்பெற்று பதிலாக ஸ்ரீ. எஸ். வி. காளிமுத்துப்பிள்ளை உதவிக் காரியதரிசியாகத் தேர்ந் தெடுக்கப்பட்டார்.

(2) தேசபக்தர் டாக்டர் அன்சாரி மனைவி ஸ்ரீமதி பிகம்அன்சாரி கால மானதுபற்றி இக்கூட்டம் அநுதாபந் தெரிவிக்கிறது.

## கூத்தகுடி

25—12—38 மாலை கூத்தகுடி புரவிப் பொட்டலில் பொதுக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. அவ்வமயம் ஸ்ரீமான்கள் கே. கன்னையா, பி. உண் ணிக் கிருஷ்ணன் முதலியோர் பேசி னர். பின்னர் வந்தனோபசாரத்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## வேம்பகோட்டையில் வெடிகுண்டு வீச்சு

6 தீவட்டிக் கொள்ளைக்காரர்கள், சாத்தூர் தாலுகா வேம்பகோட்டை போலீஸ் ஸ்டேஷனுக்கு அருகாமை யிலுள்ள ராமலிங்கபுரம் கிராமத்தி லுள்ள ஒரு வீட்டில் 18-12-38 இரவு கன்னம் வைத்துப் பொருள்களைக் கொள்ளையிட்டுச் சென்றனர். கிராம வாசிகள் அவர்களைத் துரத்திச் செல் லும்பொழுது அக் கொள்ளைக் காரர்கள் வெடிகுண்டுகளை வீசி எறிந்து சில கிராமவாசிகளையும் காயப் படுத்திவிட்டு ஓடி மறைந்தனர்.

## வ. சூரக்குடி

19-12-38 மாலை ஸ்ரீ கவி. மா. ராம. ராமையா பிள்ளை தலைமையில் வ. சூரக் குடி காங்கிரஸ்கமிட்டிக்கூட்டம் நடை பெற்றது. பல அறிஞர்கள் சொற் பொழிவாற்றிய பின் கீழ்க்கண்ட தீர் மானம் ஏகமனதாக நிறைவேறியது.

கேமம் கிராமவாசிகள் கால்நடை களுக்குக்கூட தீவனமில்லாமல் கஷ் டப்படுவதால் காடு வெட்டுவதைத் தடுத்து நியாயம் வழங்க வேண்டு மென கேட்டுக்கொள்கிறது.

### தேசீய வாலிபர் சங்கம்

19 12-38 இரவு ஸ்ரீ கவி. மா. ராம. ராமய்யா பிள்ளை தலைமையில் தேசிய வாலிபர் சங்கத்தின் புதுவருட நிர்வா கஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். ஸ்ரீ சொ. செல்லய்யா தலைவர்; ஸ்ரீ வீர. வீரப்ப ஆசாரி உப-தலைவர்; ஸ்ரீ எம். கே. வி. நாதன், ஸ்ரீ எம். திருமேனி காரியதரிசிகள்; ஸ்ரீ சா. மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை பொக்கிஷதார். மற்றும் 6 நிர்வாக அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## ராணி ரூபாய்ப் பிரச்னை

சமீபத்தில் ராணி ரூபாய் செல்லத் தக்கதுதான் என்பதைப்பற்றிப் பத் திரிகைகளில் செய்தி வெளிவந்தும் மீண்டும் ராணி ரூபாய் விழிக்கின்றது. தற்போதும் சில இடங்களில் மேற் படி ராணி ரூபாய் செல்லுபடியாகா தென்று நிராகரிக்கப்படுவதால் பொது ஜனங்களுக்குப் பொருளாதார நெருக் கடி ஏற்படுகின்றது. எனவே இவ் விஷயமாக அதிகாரிகள் வேண்டுவன செய்து கிராமங்கள்தோறும் பிரசித் தப்படுத்தல் அவசியம் என ஒரு நிரு பர் எழுதுகிறார்.

# திரிபுரா காங்கிரஸ் பிரதிநிதிகள் தேர்தல்

## தேர்தல் விதிகள்

காரைக்குடி நகரக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ சா. கணேசன் பின் வருமாறு அறிவிக்கின்றார்:—

காரைக்குடி நகரத்திலிருந்து ஒரு பிரதிநிதி தேர்ந்தெடுத்தனுப்பப்பட வேண்டும். அதற்குரிய நாமினேஷன் பாரம் வேண்டுவோர் என்னிடம் பெற்றுக்கொள்ளலாம். அதை முறைப்படி பூர்த்தி செய்து ஜனவரி மீ 2-ம் தேதி மாலை 5 மணிக்குள் காரைக்குடி ஜில்லா தேர்தல் அதிகாரியிடம் சேர்ப்பிக்கவேண்டும். தேர்தல் ஜனவரி 8-ம் தேதி நடத்தப்படும். தேர்தல் விதிகள் கீழே தரப்பட்டிருக்கின்றன.

மற்றப்படி நகரக் கமிட்டி, ஜில்லாக் கமிட்டி தேர்தல் தேதி விபரங்கள் பின்னர் அறிவிக்கப்படும்.

### தேர்தல் விதிகள்

1. ஜில்லா தேர்தல் அதிகாரிக்கு உதவியாக நியமிக்கப்படுகிறவர்கள், அந்த இலாகாவில் சம்பந்தப்பட்ட தேர்தலுக்கு அபேக்ஷகராக நிற்கக்கூடாது.

2. சேர்க்கப்பட்ட அங்கத்தினர்களின் நகல் ஜாபிதாக்களை ஒவ்வொரு தாலுகா, நகரக் கமிட்டியும் தயார் செய்து வைத்திருக்க ஜில்லாக் கமிட்டி ஏற்பாடு செய்ய வேண்டும். தேர்தல் அதிகாரி நியமிக்கப்பட்டவுடன் ஜில்லா அங்கத்தினர்களின் ஜாபிதாக்களை அவர்களுக்கு அனுப்பி வைக்கவேண்டும். தவிரவும், அபேக்ஷகர்களுக்கு தாலுகா அல்லது நகரக் காங்கிரஸ் ஆபீஸில் நகல் எடுத்துக்கொள்வதற்குப் போதுமான வசதியளிக்கப்படவேண்டும்.

3. தாலுகா கமிட்டித் தேர்தலுக்கு 15 ஸ்தானங்களை ரெவினியு பிர்க்கா வாரியாகப் பிரித்து, பிர்க்காவில் அங்கத்தினர்கள் சேர்க்கப்பட்டிருக்கும் எண்ணிக்கைக்குத் தகுந்தவாறு அங்கத்தினர்கள் ஸ்தானம் நிர்ணயிக்கப்படவேண்டும். நகரக் கமிட்டிகளுக்கு வார்டு வாரியாகத் தனித்தனியாய் வாக்காளர் ஜாபிதா தயாராகவுள்ள இடங்களில் வார்டு வாரியாகத் தேர்தல் நடத்தப்படவேண்டும். வார்டு வாரியாகத் தனித்தனியாய் வாக்காளர் ஜாபிதா தயாராகாத இடங்களில் சென்ற வருடம்போல் சேர்ந்தே தேர்தல் நடத்திக்கொள்ளலாம். பிரதிநிதி தேர்தலுக்கு முன்னதாகவே தாலுகாக்களில் தலைமை ஸ்தலத்தில் ஒரு போலிங் ஸ்டேஷனும், ரெவினியு பிர்க்காவிற்குள் 250-க்கு மேலாக அங்கத்தினர்கள் சேர்க்கப்பட்டிருந்தால், எந்தக் கிராமத்தில் அதிக அங்கத்தினர்கள் இருக்கிறார்களோ அங்கு ஒரு போலிங் ஸ்டேஷனும் ஏற்படுத்த வேண்டும். நகரங்களில் 500 அங்கத்தினர்கள் சேர்க்கப்பட்டிருக்கும் இடங்களில் ஒரு போலிங் ஸ்டேஷனும் ஏற்படுத்தவேண்டும். ஏற்படுத்தப்பட்ட போலிங் ஸ்டேஷன்களில் எந்தெந்தக் கிராமங்கள், பிர்க்காக்கள், வார்டுகள், ஓட்டுச் செய்யவேண்டுமென்ற விவரங்கள் அபேட்சகர்களுக்கு முன்னதாகத் தேர்தல் அதிகாரியால் தெரிவிக்கப்பட வேண்டும். போட்டியிருந்தால் பாலட் பேப்பர்கள் அச்சிடப்படவேண்டும். தாலுகா கமிட்டி அங்கத்தினர்கள் பிர்க்கா வாரியாக நியமிக்கப்பட்டபடி தலைமை ஸ்தலத்தில் நான்கலு அங்கத்தினர்களின் கூட்டத்தைக் கூட்டி போட்டியிருந்தால் பாலட் மூலம் வாக்கெடுக்கவேண்டும்.

3. (அ) ஜில்லா கமிட்டிக்கு அபேட்சகராக நிற்க விரும்புபவர் அந்த ஜில்லா வாசியாக இருக்கவேண்டும். ஜில்லா கமிட்டிக்கு அங்கத்தினர்களை பிரதமக் கமிட்டி அங்கத்தினர்களே தேர்ந்தெடுக்க வேண்டும். ஆனால் அபேட்சகர்களாக நான்கலு அங்கத்தினர்கள் யாரும் நிற்க உரிமையுண்டு.

4. தேர்தல் அட்டவணை:—

(அ) தேர்தல் தினத்திற்கு ஏழு நாட்களுக்கு முன்பு எப்பொழுதும் நாமினேஷன் தாக்கல் செய்யலாம்.

(ஆ) நியமனத் தேதியிலிருந்து மூன்று தினங்களுக்குள் வாபீஸ் பெற்றுக்கொள்ளலாம்.

(இ) நியமனத் தேதிக்கு முன்பும் தேர்தல் அதிகாரியிடமோ, அவரது உத்திரவு பெற்றவரிடமோ, நாமினேஷன் தாக்கல் செய்யலாம்.

(ஈ) தேர்தல் தினத்திற்குப் பிறகு இரண்டு தினங்களுக்குள் எண்ணிக்கை.

(உ) நியமனத் தேதிக்கு குறைந்தது ஏழு தினங்களுக்கு முன்பு பத்திரிகைகளிலும் வேறு வகைகளிலும் அட்டவணை பிரசுரிக்கப்படவேண்டும்.

(ஊ) நியமனத் தேதிக்குப் பிறகு அபேக்ஷகர்களின் விபரம் தேர்தல் அதிகாரியால் பிரசுரிக்கப்படவேண்டும்.

(எ) அபேக்ஷகர்கள் வாபீஸ் வாங்குவது தேர்தலுக்கு முன்பு எப்பொழுது நேர்ந்தாலும் அதை அங்கீகரிக்கவேண்டும்.

| | | |
|---|---|---|
| 1. பிரதம சபைத் தேர்தல்கள்: | ஜனவரி | 1-ந் தேதியிலிருந்து 15-ந் தேதி வரை. |
| 2. பிரதம சபை உத்தியோகஸ்தர்கள், ஜில்லா கமிட்டி அங்கத்தினர்கள் தேர்தல்: | ஜனவரி | 16-ந் தேதி முதல் 20-ந் தேதி வரை. |
| 3. ஜில்லா கமிட்டி உத்தியோகஸ்தர்கள் தேர்தல்: | ஜனவரி | 20-ந் தேதி முதல் 25-ந் தேதி வரை. |
| 4. காங்கிரஸ் பிரதிநிதிகள் தேர்தல்: | ஜனவரி | 8-ந் தேதி. |
| 5. காங்கிரஸ் தலைவர், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள், மாகாணக்கமிட்டி தலைவர் தேர்தல்: | ஜனவரி | 29-ந் தேதி. |

(ஏ) அபேக்ஷகர்கள் நியமன மனுக்களை பரிசிலனை செய்யும் முடிவில் அதிருப்தி ஏற்பட்டால், இரண்டு தினங்களுக்குள் மாகாணக் கமிட்டித் தலைவருக்கு அப்பீல் செய்துகொள்ளலாம். அவர் முடிவே காயமானது. அதற்குமேல் தேர்தலுக்குப் பிறகு காரியக் கமிட்டிக்கு அப்பீல் செய்துகொள்ளலாம். இத்தகைய தகராறுகளும், மற்ற தேர்தல் ஆக்ஷேபனைகளும் தேர்தல் நடந்த ஒரு வாரத்திற்குள் மாகாண காங்கிரஸ் காரியாலயத்திற்கு வந்து சேர வேண்டும். அதற்குப் பின்னர் வந்த ஆக்ஷேபனைகள் கவனிக்கப்படமாட்டா. குறித்த காலத்தில் கிடைத்த ஆக்ஷேபனையின் பேரில், தேர்தல் அதிகாரி, தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள், இவர்களுடைய சமாதானங்களைப் பெற்ற பிறகே பரிசிலனை செய்வார்கள்.

5. தேர்தல் ஏதாகிலும் ஒரு காரணத்தை முன்னிட்டு குறிப்பிட்ட காலத்தில் நடைபெறவில்லையென்றால், மாகாண காங்கிரஸ் தலைவரின் அங்கீகாரத்தைப்பெற்று வேறு அட்டவணை ஏற்படுத்தலாம்.

6. நியமனங்கள் ஜில்லா தேர்தல் அதிகாரியிடமோ அல்லது அவரிடம் அதிகாரம் பெற்றவரிடமோ குறித்த காலத்தில் சேரும்படி நேரிலோ தபால் மூலமாகவோ அனுப்பப்படவேண்டும். தபால் மூலமாக அனுப்புவதில் பெற்றுக்கொள்ள வேண்டியவரிடம் குறித்த காலத்தில் சேரும்படி அனுப்பியதாக ருசுப்படுத்தினால் போதும்.

7. நியமனங்களைப்பற்றிப் பரிசிலனை செய்யும் காலத்தில் ஆக்ஷேபனை யேற்பட்டால் தேர்தல் அதிகாரி அப்பொழுதே முடிவு சொல்லுவார். அதற்குமேல் மூன்று தினங்களுக்குள் சேரும்படி மாகாணக் காங்கிரஸ் தலைவருக்கு அப்பீல் செய்து கொள்ளலாம். அவருடைய முடிவும் திருப்தியல்லவென்றால், தேர்தலுக்குப்பிறகு தான் காரியக் கமிட்டிக்கு அப்பீல் செய்து கொள்ளவேண்டும்.

8. தேர்தல் தொகுதிக் காலங்கள் எல்லாம் மாகாண காங்கிரஸ் காரியக் கமிட்டியாராலேயே நிர்ணயிக்கப்படும். ஓட்டுப் போடும் விஷயத்தில் ஏற்படும் தகராறுகளைத் தேர்தல் அதிகாரியோ அல்லது அவர் அதிகாரம் பெற்றவரோ முடிவு செய்வார்கள்.

9. தேர்தல் நடக்குமிடங்களில் அபேக்ஷகரோ அல்லது அவரது அதிகாரம் பெற்றவரோ இருக்கலாம். ஆனால் ஓட்டுப் போடுமிடத்தில் கான்வாஸிங் அனுமதிக்கக் கூடாது.

40. அபேக்ஷகர்கள் ஜாபிதா தமிழ் எழுத்து வரிசைக் கிரமத்தில் தயார் செய்யப்படவேண்டும்.

11. ஓட்டு எடுக்கப்படுமிடத்தில் ஒருவரும் பார்க்காமலிருப்பதற்கு ஏற்பாடு செய்யப்படவேண்டும்.

12. போலிங் அதிகாரிகள் எல்லா அபேக்ஷகர்களுக்கும் பொதுவாக நடந்து கொள்ளவேண்டும். அவ்வாறு இல்லையானால் தேர்தல் அதிகாரி எந்தச்சமயத்திலும் போலிங் அதிகாரியை மாற்றி வேறு ஒருவரை நியமிக்கலாம். எந்தத் தேர்தல்களையும். மாகாணக் கமிட்டியாரோ அல்லது அதிகாரம் பெற்ற உப-கமிட்டியாரோ தாங்களாகவே ரத்து செய்து விடலாம்,

13. இரண்டு அபேக்ஷகர்களுக்குச் சரிசமமாக ஓட்டுக் கிடைத்தால் சீட்டுப் போட்டே முடிவு செய்யப்படவேண்டும்.

14. உத்தியோகஸ்தர்கள் தேர்தலிலும் போட்டியிருந்தால் கூட்டத்திலேயே பாலட் பேப்பர் மூலமாக நடத்தப்பட வேண்டும்.

15. நாமினேஷன் தாக்கல் செய்யும் அபேக்ஷகர் தான் எங்கு அங்கத்தினர் என்பதையும், எந்தத் தொகுதியில் நிற்க விரும்புகிறார் என்றும் குறிப்பிடுவதுடன், தாம் நிற்கும் தொகுதியின் வாக்காளர் ஒருவரால் பிரேரேபிக்கப்பட்டு ஒருவரால் ஆமோதிக்கப்படவேண்டும்.

16. பிரதம சபை, ஜில்லா கமிட்டி இவைகளுக்கு உத்தியோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்படும் கூட்ட அறிக்கை குறைந்தது ஐந்து தினங்களுக்கு முன்னதாகவாவது அறிவிக்கப்படவேண்டும்.

17. காங்கிரஸ் பிரதிநிதி தேர்தலுக்கு நிற்க விரும்பும் அபேக்ஷகர் ஒவ்வொருவரும் தேர்தல் அதிகாரியிடமோ அல்லது அவர் அதிகாரம் பெற்றவரிடமோ அபேக்ஷை மனுவுடன் ரூ. 10. கட்டணம் செலுத்தவேண்டும். வெற்றிபெறாத அபேக்ஷகர் கட்டணம் வாபீஸ் செய்யப்படமாட்டாது. அபேக்ஷை மனுப்போட்டு வாபீஸ் பெற்றுக்கொள்ளவேண்டிய இரண்டு தினங்களுக்குப் பின்னர் வாபீஸ் பெறுபவருக்கு ரூ. 5. வாபீஸ் செய்யப்படும். பாக்கி ரூ. 5-ம் தேர்தல் சிலவுக்காக வைத்துக்கொள்ளப்படும்.

# ஜமீன் விவசாயிகள் நிலைமை

தென்னிந்திய விவசாயிகள் சம்மேளனத்தின் பொதுக் காரியதரிசி பாகனேரி ஸ்ரீ ஆர். வி. சுவாமிநாதன் எழுதுகிறார்:—

ஜமீன் விசாரணைக் கமிட்டியின் அறிக்கை இப்போது பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. ரெவினியு மந்திரி கனம் டி. பிரகாசம் தலைமையில் உள்ள இந்தக் கமிட்டியார் மாகாணம் முழுதும் சுற்றுப் பிரயாணம் செய்து சாட்சியங்களையும் பழைய தஸ்தாவேஜுகளையும் தயாரித்து நியாயமானதும் பொதுவாக இருதரத்தாருக்கும் திருப்தியளிக்கக்கூடியதுமான ஒரு அறிக்கையைத் தயாரித்திருக்கின்றனர்.

1802-ம் வருடத்திய சாசுவத செட்டில்மெண்டிற்குப் பின்னர் சுமார் 138 வருடங்களாக ஜமீன்தாரர்கள் அடிக்கடி வாரங்களை உயர்த்தி வந்ததன்மூலம் பகிரங்கமாக சட்டத்தையே மீறி வந்திருக்கிறார்கள். சாசுவத செட்டில்மெண்டு பிரகாரம் விதிக்கப்பட்ட பேஷ்கிஷ் விஷயத்தில் எவ்வித மாறுதலுமில்லாமல் இருந்து வரும்போது குடிகள் செலுத்தவேண்டிய வார விகிதத்தை மட்டும் தங்கள் இஷ்டம்போல் ஜமீன்தார்கள் அடிக்கடி உயர்த்தி வசூலித்து வந்தது சட்டவிரோதம். குடிப்பாத்தியமான நிலம் பூராவும் தங்களுக்குத்தான் பாத்தியமென்று சொல்லி ஜமீன்தாரர்கள் குடியானவர்களிடம் நிலத்தை ஆக்ரமித்துக் கொண்டிருக்கிறார்களென்பதைக் கமிட்டி ஆராய்ந்து கண்டுபிடித்திருக்கிறது.

சாசுவத செட்டில்மெண்டு செய்து ஒரு விகிதத்தை நிர்ணயித்து அதில் மூன்றில் இரண்டு பாகத்தை அரசாங்கத்திற்கு பேஷ்கஷ் செலுத்தவேண்டுமென்றும், ஒரு பாகத்தை வரிவசூலிப்பதற்கு ஊதியமாகத் தாங்கள் எடுத்துகொள்ள வேண்டுமென்ற விதியை ஜமீன்தார்கள் மீறி குடியானவர்களைப் பாழாக்கி வருகிறார்கள் என்ற உண்மையை அரசாங்கத்திலிருந்த சில பெரிய உத்தியோகஸ்தர்கள் இடையிடையே உணராமலுமில்லை.

1898-ம் வருடம் இந்த அநியாயத்தை நிவர்த்திப்பதற்காக ஒரு மசோதா தயாரிக்கப்பட்டிருக்கிறது. இப்போது அந்த மசோதாவையே சட்டமாக்கிவிடலாமென்று கமிட்டி கூறுகிறது. இப்போது இதை நோக்கும்போது கமிட்டி புரட்சிகரமான மாறுதல் ஒன்றையும் சிபார்சு செய்துவிடவில்லை. சுமார் 40 வருடங்களுக்கு முன் சில ஆங்கில அதிகாரிகள் சரியான முடிவிற்கு வந்த பிரகாரம் ஜமீன் குடியானவர்களுக்கு நியாயம் வழங்கும்படி சிபார்சு செய்திருக்கிறது.

ஜமீந்தாரர்களின் உருட்டல் மிரட்டல்களுக்கும் அவர்களின் நயவஞ்சகத்திற்கும் அவர்களுக்கிருந்த ஏகாதிபத்தியத்தின் சலுகைக்கும் பயந்தே 1898-ம் வருடம் தயாரித்த மசோதா அப்போதே சட்டமாக்கப்படாமல் கைவிடப்பட்டிருக்க வேண்டும்.

'மெட்ராஸ் மெயில்' இந்த அறிக்கை புரட்சிகரமானதென்றும் ஒரு சட்டசபையால் நியமிக்கப்பட்ட எந்தக் கமிட்டியும் இதுவரை இத்தகைய தீவிர மாறுதல் செய்யும் அறிக்கை தயாரித்ததில்லையென்றும் அதன் தலையங்கத்தில் குறிப்பிடுகிறது. 'மெட்ராஸ் மெயில்' கூறுவது உண்மையானால் குடியானவர்களின் உண்மையான தேவைகளை உணர்ந்து அவர்களின் இழந்துபோன உரிமைகளை திருப்பிக் கொடுப்பதன்மூலம் நியாயம் வழங்க வேண்டுமென்ற உண்மை உணர்ச்சியுடன் ஒரு காலத்திலும் ஒரு சட்ட சபையிலும் ஒரு கமிட்டியையும் நியமிக்கவில்லையென்பதையும் ஒப்புக்கொள்ளவேண்டும்.

இந்தக் கமிட்டியின் தலைவர் கனம் டி. பிரகாசம், அங்கத்தினர்களான ஸ்ரீமான்கள் பி. எஸ். குமாரசாமி ராஜா, வெங்கடாசலம் பிள்ளை, பல்லமராஜு, ஜோகையா பந்துலு முதலியவர்கள் பல ஆண்டுகளாக குடியானவர்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டிருப்பவர்கள். இவர்கள் கட்டுப்பாடாக ஜமீன் குடிகளின் பறிமுதலான உரிமைகளை மீண்டும் வழங்குமாறு சிபார்சுசெய்திருக்கிறார்கள். ரயத்துவாரி குடியானவர்களுக்கும் ஜமீன் குடியானவர்களுக்கும் மிகுந்த வித்தியாசம் இருக்கிறது.

### சாசுவத செட்டில்மெண்டு

குடிகளைக் கசக்கிப் பிழிந்து வரி வசூலித்து தங்கள் போக பாக்கியங்களுக்கு செலவு செய்வதிலேயே ஜமீந்தார்கள் நாட்டம் செலுத்திவந்தார்களே தவிர நீர்ப்பாசன வசதி, மராமத்து முதலிய விவசாய அபிவிருத்தியில் கொஞ்சம்கூட கவனம் செலுத்தவேயில்லை. எல்லா ஜமீன் பிரதேசங்களிலும் குறிப்பாக தென் ஜில்லாக்களிலுள்ள ஜமீன்களிலும் பெரும்பாகம் ஆற்றுப்பாசனமே கிடையாது. நல்ல மழையிருந்தாலும் வருடத்தில் ஒரு போகம் சாகுபடிதான் செய்ய முடியும்.

சுமார் 138 வருடங்களாக ஜமீன் குடிகள் ரயத்துவாரி விகிதத்தைப்போல 3 மடங்கு, 4 மடங்கு விகிதம் வரியை அநியாயமாகச் செலுத்தி சின்னபின்னப்பட்டு நாசமடைந்துபோயிருக்கிறார்கள்.

1802-ம் வருடத்திய செட்டில்மெண்டு ஜமீன் குடியானவர்களின் உரிமை. ஜமீந்தார்களால் சட்டவிரோதமாகப் பறிக்கப்பட்டிருக்கிறது. இதை ஜமீன் குடிகள் அடைந்தே தீரவேண்டும். இதையடைவதற்காக ஒரு பெருத்த சாத்வீகப் போராட்டம் நடக்கவேண்டியிருந்தாலும் அதற்கும் ஜமீன் குடியானவர்களாகிய நாங்கள் தயார்.

எனவே, பிரகாசம் கமிட்டி அறிக்கையில் கண்டவற்றில், எந்தவிதமான மாறுதலுமில்லாமல் மசோதா கொண்டுவரப் படவேண்டும். ஒரு சிறிது மாறுதல் செய்தாலும் ஜமீன் குடியானவர்கள் ஒப்புக்கொள்ளப்போவதில்லை. இதில் சில மாறுதல்கள் செய்யவேண்டுமென்று சிலர் முயற்சிப்பதாகவும் தெரியவருகிறது. ஜமீன் குடிகளின் உரிமையைப் பாதிக்கும் இத்தகைய வீணை முயற்சிகளில் ஈடுபடவேண்டாமென்று அவர்களைத் தாழ்மையாக வேண்டிக்கொள்கிறேன்.

---



# சென்னை ரேடியோ

★

**டிச. 29-உ வியாழன்**

மாலை5-00 ஸ்ரீ ஜி. எஸ். விஜய ராவ் வாய்ப்பாட்டு.
5-30 ஸ்ரீ லக்ஷ்மி நாராயண பாகவதர் வாய்ப்பாட்டு.
6-05 தொத்து வியாதிகள் 'பிளேக்'—தமிழில் ஒரு பிரசங்கம்.
6-15 அகில இந்தியக் கதர்—தமிழில் ஒலிபரப்பு விமர்சனம்.
6-30 ஸ்ரீ பி. ஆர். ஸ்ரீபதி (மைசூர் ராஜப்பாவின் குமாரர்) வாய்ப்பாட்டு.
இரவு7-00 கிராமபோன் ரிகார்டுகள்.
7-15 பொருளாதாரம்-ஸ்ரீ கே. எஸ். என். மூர்த்தி பிரசங்கம்.
7-30 ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள் கர்நாடக சங்கீதக் கச்சேரி.
9-15 ஸ்ரீ வி. சேஷசாயி ஆங்கிலப் பிரசங்கம்.
9-30 தஞ்சாவூர் ஸ்ரீ துரையப்ப பாகவதர் கோட்டு வாத்தியம்.

**30-உ வெள்ளி**

மாலை5-00 ஸ்ரீ டி. சங்கரன் வாய்ப்பாட்டு.
6-00 தெலுங்கில் ஒரு சாகித்யக் கதை.
6-15 தெலுங்குப் பிரசங்கம்.
6-30 பெண்களுக்குப் பிரத்யேக நிகழ்ச்சிகள்.
இரவு7-00 ஸ்ரீமதி தேவகுஞ்சரி வாய்ப்பாட்டு.
7-15 'தமிழ் மகளும் தங்கைகளும்' ஸ்ரீ ஆர். சேதுப் பிள்ளை பிரசங்கம்.
7-30 சினிமாப் பாட்டுகள்.
8-00 'புனசந்தானம்'—தெலுங்கில் ஒரு நாடகம்.
8-20 டைகர் ஸ்ரீ கே. வரதாச்சாரி வாய்ப்பாட்டு.
9-15 ஆங்கிலப் பிரசங்கம்.
9-30 ஐரோப்பிய சங்கீதம்.

**31-உ சனி**

மாலை5-00 பாலையூர் ஸ்ரீ வெங்கடராம ஐயர் வாய்ப்பாட்டு.
6-05 'கால் நடைக்குச் சிறந்த தீனி'—தமிழில் ஒரு பிரசங்கம்.
6-15 அ. இ. கதர் -குடிசைக் கைத் தொழில் பகுதி-தமிழில் ஒலி பரப்பு.
6-30 ஸ்ரீமதி ஆர். ப்ரகதாம்பாள் வாய்ப்பாட்டு.
இரவு7-00 'சென்ற 1938-ம் ஆண்டு' ஒரு விசேஷ நிகழ்ச்சி.
7-15 தெலுங்குப் பிரசங்கம்.
7-30 ஸ்ரீ டி. செளடையா வாய்ப்பாட்டு.
9-15 'இன்றுடன் முடியும் ஆண்டு'-ஒரு விசேஷ நிகழ்ச்சி.
9-30 திருச்சூர் ஸ்ரீ எம். லக்ஷ்மி வாய்ப்பாட்டு.

**1939-ஆம் ஜன. 1-உ ஞாயிறு**

மாலை5-00 புதிய வருஷம் ஸ்ரீ கணபதி ஸ்தோத்திரத்துடன் ஆரம்பிக்கப்பெறும்.
5-10 கிரனூர் சகோதரர்கள்-ஸ்ரீ கண்ணப்ப பிள்ளையும், ஸ்ரீ சின்னத்தம்பி பிள்ளையும் நாகசுரக் கச்சேரி.
6-10 ஸ்ரீ ரங்க ஐயங்கார் வாய்ப்பாட்டு.
இரவு7-00 'புதுமை வருக'—தெலுங்கில் ஒரு புதிய வருஷ நிகழ்ச்சி.
7-15 கிரனூர் சகோதரர்கள் நாகசுரம்.
7-45 ஸ்ரீமதி பாலாம்பாவும் ஸ்ரீமதி சுகந்தியும் வாய்ப்பாட்டு.
8-35 ஸ்ரீ வி. எம். ராமமூர்த்தி வாய்ப்பாட்டு.
9-15 மதராஸ் நிலைய நிர்வாகஸ்தர் ஆங்கிலப் பிரசங்கம்.
9-30 ஐரோப்பிய சங்கீதம்.

**2-உ திங்கள்**

மாலை5-00 திருச்செந்தூர் திருப்புகழ் கோஷ்டியினரின் திருப்புகழ்க் கச்சேரி.
6-00 கோஷ்டிப் பாட்டு.
6-10 தெலுங்குப் பிரசங்கம்.
6-20 நாட்டுப்புறப் பாட்டுகள்—குமாரி செளரிஸ்.
6-30 'பகவத் கீதை'— தமிழில் ஒரு விசேஷ நிகழ்ச்சி.
இரவு7-00 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி.
7-15 நோக்க வேறுபாடுகள் (தொடர் விவாதங்கள்)— 'ஆணும் பெண்ணும்' 1 (தமிழ்). பெண்கள் பக்கம்-டாக்டர் வி. மீனாக்ஷி அம்மாள்; ஆடவர்கள் பக்கம்—ஸ்ரீ பி. என். அப்புசாமி.
7-30 தெலுங்கில் 'ஊர்வசி' நாடகம்.
8-30 ஸ்ரீமதி டி. டி. சரஸ்வதி அம்மாள் வாய்ப்பாட்டு.
9-15 ஆங்கிலப் பிரசங்கம்.
9-30 மதராஸ் ரேடியோ நாடகத்தார் ஆதரவில் 'ருக்மாங்கதா' நாடகம் நடைபெறும்.

**3-உ செவ்வாய்**

மாலை 5-00 செஞ்சி ஸ்ரீ லக்ஷ்மியா நாயுடு புல்லாங்குழல்.
5-45 சினிமாப் பாட்டுக்கள் கிராமபோன் ரிக்கார்டு.
6-00 சித்தர் பாடல்.
6-10 'மாட்டுக்குவரும் தொத்து வியாதி'—தமிழில் ஒரு பிரசங்கம்.
6-20 கம்ப ராமாயணம் மூலமும் வியாக்கியானமும்.
6-30 வாய்ப்பாட்டும் வீணையும் ஒரு பெண்மணி ஸ்ரீ நீலகண்டசிவன் சாகித்யங்கள் (தமிழ்).
இரவு7-15 தெலுங்குப் பிரசங்கம்.
7-30 சாத்தூர் ஸ்ரீ சுப்ரமண்யம் வாய்ப்பாட்டு.
8-15 ஸ்ரீ வி. கிருஷ்ணமூர்த்தி ஐயர் வாய்ப்பாட்டும் பிடிலும்.
9-15 'உண்மையைச் சொல்ல வைக்கும் கேள்வி'.
9-30 ஸ்ரீ டி. பி. சிவசங்கரம் பிள்ளை வாய்ப்பாட்டு.

**4-உ புதன்**

மாலை5-00 மன்னார்குடி ஸ்ரீ எம். மாணிக்கம் பிள்ளை நாகசுரம்.
6-00 ஸ்ரீமதி மல்லாவரபுரி ஜெயலக்ஷ்மி சங்கீதம்.
6-10 தெலுங்குப் பிரசங்கம்.
6-20 ஸ்ரீமதி மல்லாவரபுரி ஜெயலக்ஷ்மி தரங்கங்கள்.
6-30 மன்னார்குடி ஸ்ரீ எம். மாணிக்கம் பிள்ளை நாகசுரம்.
இரவு7-15 'சம்பிரதாய உலகம்'— ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் தமிழ்ப் பிரசங்கம்.
7-30 ஸ்ரீ எஸ். லக்ஷ்மி நரசிம்ஹன் வாய்ப்பாட்டு.
8-15 பூவனூர் ஸ்ரீ சீனிவாச பாகவதர் வாய்ப்பாட்டு.
9-15 ஆங்கிலப் பிரசங்கம்.
9-30 ஐரோப்பிய சங்கீதம்.

---

## 'சமஷ்டியை எதிர்க்கிறேன்'

### சீனிவாஸ அய்யங்காரின் கருத்து

24-12-38 மாலை சென்னை செளகார் பேட்டை காங்கிரஸ் சபையின் முதல் வருஷாந்திரக் கொண்டாட்டத்திற்கு ஸ்ரீ எஸ். சீனிவாச ஐயங்கார் தலைமை வகித்தார். அவர் பேசியதன் சாரம் வருமாறு:

"எல்லாவிதத் தொழில்களையும், பாங்கிகள், ரயில்வேக்கள் உட்பட தேசியமயமாக்கினால்தான் வேலையில்லாத் திண்டாட்டம் அறவேஒழிய வழி ஏற்படும்.

நான் சமஷ்டியைத் தீவிரமாக எதிர்க்கிறேன். இதுபற்றி காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ சுபாஷ் போஸ் தெரிவித்துள்ள அபிப்பிராயமே காங்கிரஸில் நிலவி இருக்குமென்று நம்புகிறேன். சமஷ்டியை ஒப்புக்கொள்வதானால் சுயராஜ்யப் போராட்டத்திற்கு அதையே முடிவென்று கொள்ளலாம். ஆகவே சமஷ்டியை நாம் ஒப்புக்கொள்ள முடியாது.

காங்கிரஸ் சர்க்கார் நமது சொந்த தேசிய சர்க்கார் என்பதை உணர்வீர்கள். அந்நிய ஆட்சியை எதிர்த்துப் போராடுகையில் இருந்த பேச்சு சுதந்திரக் கட்டுப்பாட்டை இப்பொழுது நமது காங்கிரஸ் சர்க்கார் பதவியேற்ற பின்பும் அம்மாதிரி உபயோகிக்கக் கூடாதென்று வற்புறுத்துகிறேன். இதனால்தான் இப்பொழுது காங்கிரஸ்காரர்களிடையே அதிருப்தி ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. நான் வந்தால் மிக திருப்தி ஏற்படலாம்; ஆனால் இப்பொழுது உங்களுக்கு உள்ள திருப்தி போதுமென்று நினைக்கிறேன். மந்திரிகள் காங்கிரஸ் சர்க்காரை நடத்திக்கொண்டே சுயராஜ்யப் போராட்டத்தையும் நடத்தலாம்; ஆனால் அவர்களுக்கு டிவாலரா போன்ற ராஜதந்திரிகளின் சாமர்த்தியம் வேண்டும். பூரண சுயராஜ்யம், பூரண தேசீயம், பரிபூர்ண ஜனநாயகம், பரிபூரண நீதி, பூரண லெளகிக நியதி ஆகிய இவ்வைந்துமே தேச விடுதலைப் போராட்டத்தின் பஞ்ச பூதங்கள்.

பல பிரச்னைகளிலும் காங்கிரஸ்காரர்கள் பிரிந்துகொள்வதற்கு அனுமதிக்கப்பட வேண்டும். கிரிமனல் சட்டத்தை ரத்து செய்ய வேண்டும். இந்தச் சட்டம் இல்லாமலேயே ஒழுங்கையும், அமைதியையும் நிலைநாட்ட முடியும்.

தேச நலம் என் மனதில் குடி கொண்டிருக்கிறது. காங்கிரஸ் மீதும் எனது பூர்ண அபிமானமும், அன்பும் இருக்கின்றன."

ஸ்ரீமான்கள் வி. என். முத்துரங்க முதலியார், கே. வெங்கடசாமி நாயுடு, ஜனாப் எஸ். ஏ. ஷாமிமுகமத் முதலியோர் திரு. எஸ். சீனிவாஸ ஐயங்காரின் சேவையைப் பாராட்டி, அவர் மீண்டும் அரசியலில் கலந்து கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொண்டனர்.

---

## பிலிம் கதை

**காரைக்குடி ஸ்ரீ கிருஷ்ண டாக்கீசுக்கு வரப்போகும் 'லக்கி ஸ்டார் அல்லது பாக்யதாரா' என்ற தமிழ்ப் படத்தின் கதைச் சுருக்கம்**

சென்னையில் ஒரு தனவந்தரான சந்திரசேகர முதலியாரின் புத்ரி சரஸ்வதி, சரஸ்வதியின் பந்துவான பிரபாகர், சிவபுர மிராசுதார் ராஜரத்னம் பிள்ளை மகன் சுந்தரம் இம்மூவரும் சென்னைக் கலாசாலையில் சேர்ந்து படித்தவர்கள். சுந்தரத்தின் குணநிசயங்களையும், கல்வி, விளையாட்டு இவைகளில் முன்னணியில் நிற்பதையும் கண்ட சரஸ்வதி இவன்மேல் காதல் கொள்கிறாள். பிரபாகருக்கு சரஸ்வதியை எப்படியும் மணக்கவேண்டுமென்ற ஆசையிருக்கவே அவள் தந்தையிடம் இதை வெளியிடுகிறார். இந்த யோஜனையை சரஸ்வதி நிராகரிக்கிறாள்.

சுந்தரத்தின் தாய் மீனாவும், சகோதரி கமலாவும் படிப்பின் நிமித்தம் சுந்தரத்திற்கு தன் ஆஸ்திகளெல்லாம் செலவிட்டபின் வறுமைப் பிணியில் ஆழ்ந்து கஷ்டப்படுகையில் சுந்தரம் எம். எஸ். ஸி. பரிக்ஷையில்தேறி வேலையில்லாமல் திண்டாடுகிறான். கூலி வேலையாவது செய்யலாம் என்றுநினைக்க,எதிர்பாராவண்ணம் கூலிகளால் அடித்துத் துரத்தப்படுகிறான். தாய் தங்கையின் கஷ்டம் ஓர் புறம், தனக்கு ஆகாரத்திற்கும் வழியில்லாமல் திண்டாடுவது மற்றொரு புறமுமாக ஏங்கி நிற்கும் சுந்தரம் திருட்டு வழியிலாவது பிரவேசிக்க எண்ணங்கொண்டு ஓர் வீட்டில் நுழைந்து திருட எத்தனிக்கையில் தன் மனச்சாட்சி இடங்கொடாமற் திரும்பி விடுகிறான். வரும் வழியில் ஓர் பள்ளத்தில் மாட்டிக்கொண்டிருக்கும் ஓர் நாயைக் கரையிலேற்றிவிட அது இவன்பால் விசுவாசம் கொண்டு இவனுடன் 'லக்கி' என்ற பெயருடன் வளர்ந்து வருகிறது. ஒரு நாள் இவனும் லக்கியும் வெளியில் போகும்போது ஒரு சர்க்கஸ் கொட்டகையில் நடக்கும் வேடிக்கைகளை சுந்தரம் திரையின் ஓட்டை வழியாகப் பார்க்கவே அங்கிருந்த வேலைக்காரன் இவனை அடிக்க 'லக்கி' அந்த வேலைக்காரன்மேல் பாய்ந்து அவனைக் கடிக்கிறது. இந்தச் சப்தத்தில் சர்க்கஸ் மானேஜர் முதலியோர் ஓடிவர நாயின் சாமர்த்திய வேலையைப் பார்த்து சுந்தரத்தை மறுநாள் வேலையில் சேர்த்துக்கொள்வதாக வரச் சொல்லுகிறார்.

பிரபாகரும் சரஸ்வதியும் சாதாரண சிநேக முறையில் பீச்சுக்குக் காரில் போகும்பொழுது பிரபாகர் காதல் மொழிகளை அவள் மேல் வருஷிக்க அவள் அவனை ஏமாற்றிவிட்டு காரை எடுத்துக்கொண்டு வருகிறாள். சர்க்கஸ் மானேஜரைப் பார்க்கப் போய்க் கொண்டிருக்கும் சுந்தரத்தின் மீது கார் மோதப்படவே சுந்தரத்தை இன்னாரென்று தெரிந்து கொள்ளவில்லை. தன் வீட்டிற்கு எடுத்துச் சென்று சிகிச்சை செய்கிறாள். பின்பு இவன் சுந்தரம் என்று அறியவே இவர்களின் காதல் தெய்விகக் காதலாக மாறித் திகழ்கிறது.

பிரபாகரின் பொறாமை, அதன் பயனாய் இவர்களின் கஷ்டம், 'லக்கி' நாயின் அபரிமிதமான சாமர்த்திய வேலைகள், சுந்தரம், சரஸ்வதி இவர்களின் சேர்க்கை மற்றும் பல நிகழ்ச்சிகளும் இப்படத்தில் நிறைந்துள்ளன.

---

### ஷ்யாம் சுந்தர்

லக்ஷ்மி ஸினிடோனின் 'ஷியாம் சுந்தர்' என்ற தமிழ்ப் படம் ஜனவரி மாதக் கடைசிக்குள் வெளிவருமெனத் தெரிகிறது.

# மீண்டும் ஷர்லிக்கு 'ராணி'ப் பட்டம்

## பம்பாயில் பிலிம் கம்பெனிகள் இணைப்பு

### சென்னை பிலிம் மகாநாடு

22-12-38 அன்று சென்னை கோகலே ஹாலில் மூன்றுவது சென்னை மாகாண பிலிம் மகாநாடு ஸ்ரீ ஏ. நாராயணன் தலைமையில் கூடியது. அவ்வமயம் அவர், ஹிந்திப் படங்கள் எவ்வளவு தயாராகின்றனவோ அதில் ஆறிலொரு பாகமே தமிழ், தெலுங்குப் படங்கள் தயாராகின்றன வென்றும், பள்ளிக்கூடங்களில் ஹிந்தி கட்டாயப் பாடமாய் வைக்கப் பட்டிருப்பதால் இனி தென்னிந்தியாவிலும் ஹிந்திப் படங்கள் தயாரிக்க வசதி ஏற்படுகிறதென்றும் கூறினார்.

வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ ராமப்பிரும்மம் பேசுகையில் தேசியப் புனருத்தாரணத்திற்கு சினிமாத் தொழில் அவசியமென்றும், இதை சுபாஷ் போஸும், ஜவஹரும் சமீபத்தில் குறிப்பிட்டிருக்கின்றனரென்றும், சினிமாத் தொழில் அபிவிருத்திக்கு ஆராய்ச்சிகள் செய்யப்படவேண்டுமென்றும் குறிப்பிட்டார். 23௳ அன்று ஸ்ரீமான்கள் ஒய். வி. ராவ், முத்துசுவாமி அய்யர், ராமய்யா முதலியவர்களும் சொற்பொழிவு ஆற்றினர்.

24—௳ அன்று மகாநாட்டுக்கு ஸ்ரீ ஒய். வி. ராவ் தலைமை வகித்தார். கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின.

(1) அபாயகரமான கட்டங்களில் நடிக்கும் ஒவ்வொரு நடிகரும், பட முதலாளியின் செலவில் இன்ஷ்யூர் செய்துகொள்ள வேண்டும்.

(2) எல்லா ஸ்டுடியோக்களிலும் பாக்டரி சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும்.

(3) விளம்பரங்கள் மீது வரி, தமாஷ் வரி முதலியவைகளை குறைக்கும்படி சென்னை அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறது.

(4) சினிமாடோகிராப் சட்டப்படி சினிமாப் படங்களுக்கு சர்டிபிகேட் அளிப்பது பிடித்தமில்லாமலிருப்பதால், கொஞ்சம் தாராளமாக விதிகளைக் கவனிக்கும்படிக்கும், அதற்கு ஒரு தனி உத்தியோகஸ்தரை நியமிக்க வேண்டுமென்றும் அரசாங்கத்தாரை கேட்டுக்கொள்கிறது.

(5) சினிமாத்தயாரிப்பவர்கள் அடிக்கடி அநேக இடங்களுக்குப் பிரயாணம் செய்யவேண்டியிருப்பதால், ரயில்வேயில் அவர்கட்குக் குறைந்த கட்டணத்தில் பிரயாணம்செய்ய வசதிகள் அளிக்கப்படவேண்டும்என்று ரயில்வே அதிகாரிகளைக் கேட்டுக்கொள்கிறது.

(6) அயல் நாடுகளிலிருந்து வரவழைக்கப்படும் இயந்திரங்கள், பிலிம் ரோல்கள் முதலானவற்றின் மீது விதிக்கப்படும் வரிப் பளுவைக் குறைக்கும்படி அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கிறது.

(7) வெளி நாடுகளில் இந்தியப் படங்கள் அவமதிக்கப் படுவதைத் தடுக்கும்படி அரசாங்கத்தாரை வேண்டுகிறது.

(8) சினிமாத் தொழிலை அபிவிருத்தி செய்ய புது ஆராய்ச்சிகளைச் செய்யவும், சினிமாத் தொழிலின் விதிகள் சரியாக அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றனவா என்பதைக் கவனிக்கவும் உத்தியோகப் பற்றற்ற ஒரு கமிட்டி நியமிக்கப்பட வேண்டும்.

(9) சினிமா சம்பந்தமான புது விதிகளையும் சட்டங்களையும் உண்டாக்க ஒரு காரியக்கமிட்டி 'சென்னை அகடமி' என்ற பெயரால் நியமிக்கப்பட வேண்டும்.

### 'சினிமா ராணி'—ஷர்லி டெம்பிள்

ஷர்லி டெம்பிள் எனும் குழந்தை நடி நான்காவது வருஷத்திற்கும் அமெரிக்க சினிமாத் தியேட்டர் முதலாளிகளால் மீண்டும் 'சினிமா ராணி' எனத் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறாள்.

### பாக்ய லட்சுமி

கோவை பிரிமியர் ஸினிடோனில், ராம் குமார் "பாக்ய லட்சுமி" படத்தைத் தயாரித்து வருகிறார்.

### மணிமேகலை

ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் நடிக்கும் 'மணிமேகலை' என்ற தமிழ்ப் படத்திற்கு ஸ்ரீஏ.ஏ.சோமயாஜுலு வசனம் எழுதப்போகின்றாரெனத் தெரிகிறது.

### விமோசனம்

'விமோசனம்' என்ற படம் 'எடிட்டிங்'கில் இருக்கிறதாம். இப் படத்தில் சென்னை அசெம்பிளிக் காட்சி ஒன்று சேர்க்கப்பட்டிருக்கிறதாம்.

### ராவணன் திக் விஜயம்

'ராவணன் திக் விஜயம்'எனும் படம் மார்க்கோனி டைரக்ஷனில் நேஷனல் மூவிடோனில் தயாரிக்கப்படுமெனத் தெரிகிறது.

### சந்தனத் தேவன்

'சந்தனத் தேவன்' என்ற தமிழ்ப் படம் பாதிக்கு மேல் முடிந்திருக்கிறது. படத்தின் 'எடிட்டிங்' அவ்வப்போது நடந்து வருகிறது.

### தேசபந்து

'தேசபந்து' எனும் படத்தை நாளாந்தா பிக்சர்ஸார் கல்கத்தா டாலிவுட் ஸ்டுடியோவில் பிடிக்க ஆரம்பித்துவிட்டனர்.

### பிரம்மச்சாரி

'பிரம்மச்சாரி' எனும் ஹாஸ்யப் படத்திற்கு இந்திய சினிமாப் பிரியர் சங்கத்தார் 1938-ம் வருடத்திய பரிசை அளித்திருக்கின்றனர்.

### பம்பாயில் 25 லட்சம்

பம்பாயிலுள்ள சில பிலிம் கம்பெனிகளை ஒன்று படுத்துவதற்காக ரூ. 25 லட்சம் மூலதனத்துடன் ஒரு கம்பெனி ஆரம்பிக்கப்படுமெனத் தெரிகிறது.

### நாகசுரம் ராஜரத்தினம்

திருவாவடுதுறை நாகசுர வித்வான் ஸ்ரீ ராஜாரத்தினம் ஒரு புதிய தமிழ்ப் படத்தில் பிரதம பாகம் தாங்குவாரென்று தெரிகிறது.

### தியாக பூமி

'தியாக பூமி' படக்காட்சிகள் சென்னை மோஷன் பிக்சர்ஸில் தயாரிக்கப்பட்டு வருகின்றது. இதில் சம்பு சாஸ்திரியாக நடிப்பவர் பாபநாசம் சிவன். இவர் வீட்டில் பஜனைகளெல்லாம் குதூகலமாக நடக்கின்றன. ஸ்ரீமதி எஸ். டி. சுப்புலெட்சுமி, சாஸ்திரியின் முதல் மனைவியின் பெண்ணாக நடிப்பது மிக வேடிக்கையாக விருக்குமெனச் சொல்லப் படுகிறது.

கிருஷ்ணா டாக்கீசில் வரப்போகும் 'பாக்யதாரா'வில் ஒரு காக்ஷி.





(2-ம் பக்கம் தொடர்ச்சி.)

வாலிபர் குனிந்து முழுப்பலத்துடன் ஒரு தள்ளுத் தள்ளினார். வண்டிமேலே ஏறிவிட்டது!

குடியானவன் கைகளைக் குவித்துக் கொண்டே,

"மகாராஜா! நீங்கள்தான் இன்றைக்கு என்னைக் காப்பாற்றினீர்கள். இல்லாவிடில், இரவு முழுதும் நான் இங்கேயே உட்கார்ந்திருக்க நேரிடும்."

என்றார். வாலிபர் புன்சிரிப்புடன்,

"இப்பொழுது ஏதேனும் எனக்கு இனும் கொடுப்பாயா?"

என்று கேட்டார். குடியானவன் உடனே மிகுந்த கம்பீரத்துடன்,

"ஸ்ரீமன் நாராயணன் மனது வைத்தால் திவான் பதவி உங்களுக்கே கிடைக்கும்."

என்றான். வாலிபர் குடியானவனைக் கவனமுடன் பார்த்தார். அவர் மனதிலே ஒரு சந்தேகம் 'என்ன இவர் சுஜான் சிங் இல்லை?'

அதே குரல், முகச் சாயலெல்லாம் அப்படியே இருக்கிறது. குடியானவன் வாலிபரை உற்றுப்பார்த்தான். வாலிபர் மனதில் குழம்பிக்கொண்டிருந்த சந்தேகத்தை அறிந்துகொண்டான். புன்சிரிப்புடன் சொன்னான்:

'ஆழமான தண்ணீரில் மூழ்குவதனாலேயே முத்துக்கள் கிடைக்கின்றன.'

மாதம் 30 நாட்களும் முடிந்து விட்டன. தேர்ந்தெடுக்கும் தினம் வந்தது. விண்ணப்பதாரிகள் காலையிலிருந்தே தங்கள் பாக்யத்தின் தீர்ப்பைக் கேட்பதற்கு உத்சாகத்துடன் இருந்தார்கள். பொழுதுபோவது ஒரு மலைபோலத் தோன்றியது. ஒவ்வொருவர் முகத்திலும் நம்பிக்கையும் அவநம்பிக்கையும் மாறி மாறித் தோன்றிக்கொண்டிருந்தன. யாருக்கு அதிர்ஷ்டமென்றும் யார்மீது லட்சுமி கடாட்சம் இருக்கிறதென்றும் தெரியாதிருந்தது.

மாலையில் மகாராஜாவின் சொலுக் கூடம் அலங்கரிக்கப் பட்டிருந்தது. பட்டினத்துப் பணக்காரர்களும், ஜமீன்தார்களும், தர்பார் உத்தியோகஸ்தர்களும், வேலைக்காரர்களும், விண்ணப்பதாரிகளும் விதம் விதமான ஆடை அலங்காரத்துடன் வந்திருந்தார்கள். அச்சமயத்தில் சுஜான் சிங் எழுந்து நின்று கூறியதாவது:

"விண்ணப்பதாரிகளே! நான் உங்களுக்கெல்லாம் சிறிது சிரமத்தைக் கொடுத்தமைக்காக என்னை மன்னியுங்கள். மனோதைரியமும் ஆத்மபலமுமுள்ள ஒருவர்தான் இப் பதவிக்குத் தேவை. உதார குணமுள்ளவன்தான் இருதயமுடையவன். ஆபத்துக் காலத்திலே ஆபத்தை எதிர்த்து நிற்பவன்தான் ஆத்மபலமுள்ளவன். தேவகடுவுக்கு அதிர்ஷ்டவசமாக அப்பேர்ப்பட்ட ஒருவர் கிடைத்திருக்கிறார். இத்தகைய குணமுள்ளவர்கள் உலகத்திலே மிகக் குறைவு. அவர்கள் கீர்த்தி, மரியாதை ஆகியவற்றின் சிகரத்திலே இருப்பார்கள். நாம் அது வரையில் போகவில்லை. நாம் தேவகடுவுக்கு பண்டித ஜானகி நாத்தைப் போன்ற திவானை அடைவதில் மிகவும் மகிழ்ச்சி கொள்ளுகிறேன்."

தேவகடுவின் வேலைக்காரர்களும் ஜமீன்தார்களும் ஜானகிநாத்தின் பக்கத்தைப் பார்த்தார்கள். விண்ணப்பதாரிகளின் கண்கள் அங்கு ஒருமித்தன. ஆனால் முன்னால் சொல்லப்பட்டவர்களுடைய கண்களில் மரியாதை இருந்தது. இவர்களுடைய கண்களில் பொறாமையும் துவேஷமும் நிறைந்து காணப்பட்டன.

சுஜான் மேலும் பேசலானார்;

எந்த மனிதர், தாமே காயமடைந்திருந்துங்கூட, ஏழைக் குடியானவனுடைய சாமான் நிறைந்த வண்டியை வாய்க்காலிலிருந்து கரையேற்றினாரோ, அந்தமனிதருடைய உள்ளத்திலேதான் தைரியம்—ஆத்ம பலம்—தயை ஆகியவை குடிகொண்டிருக்கின்றன என்பதை ஒத்துக்கொள்ளுவதில் உங்களுக்கு ஆபத்து ஏற்படாது. அத்தகைய மனிதர் ஏழைகளை ஒருபோதும் துன்புறுத்த மாட்டார். அவருடைய சித்தம் மிகத்திடமானது. நினைத்ததைச் செயலிலே செய்வார். அவர் ஏமாறலாம்; ஆனால் நீதியையும் இரக்கத்தையும் கொண்ட ஒரு மார்க்கத்தை விட்டு மாறமாட்டார்.

—காவி.

---

கல்கத்தாவில் 28-12-38ல் கூடும் அகில இந்திய ஸ்தல சுயயாட்சி இலாகா மகாநாட்டில் ஸ்ரீ என். சத்திய மூர்த்தி தலைமை வகிப்பார்.

# ரயில் வண்டிகளின் போக்குவரத்து கால விபரம்

### திருச்சியிலிருந்து—மானமதுரைக்கு

| ஸ்டேஷன்கள். | | 25 நி. பாஸ்ட் பாஸஞ்சர். | 1 நி. இண்டோ சிலோன் எக். | 67 நி. பாஸஞ்சர். | * 33 நி. பாஸஞ்சர். | * 29 நி. பாஸஞ்சர். | 31 நி. பாஸஞ்சர். | 7 நி. தனுஷ் பாஸ்ட் பாஸஞ் |
|---|---|---|---|---|---|---|---|---|
| திருச்சினப்பள்ளி ... | | 3-57 | 7-30 | 10-20 | | 13-15 | 17-25 | 22-15 |
| புதுக்கோட்டை | வரு | 5- | 8-33 | 11-54 | | 14-30 | 18-52 | 23-34 |
| | புற | 5-6 | 8-41 | 12-0 | | 14-37 | 18-58 | 23-40 |
| நமனசமுத்திரம் ... | | 5-17 | 8-52 | 12-10 | | 15-0 | 19-9 | - - |
| திருமயம் .. | | 5-31 | 9-8 | 12-23 | | 15-13 | 19-23 | 0-3 |
| செட்டிநாடு ... | | 5-45 | 9-24 | 12-39 | | 15-30 | 19-37 | 0-19 |
| கோட்டையூர் ... | | 5-55 | 9-34 | 12-48 | | 15-39 | 19-47 | 0-29 |
| காரைக்குடி | வரு | 6-9 | 9-50 | 13-2 | | 15-53 | 20-4 | 0-44 |
| | புற | 6-15 | 10-1 | | 14-5 | 16-24 | 20-35 | 0.50 |
| தேவகோட்டை ரஸ்தா | | 6-25 | 10-9 | | 14-13 | 16-32 | 20-43 | - - |
| கல்லல் ... | | 6-42 | 10-26 | | 14-30 | 16-49 | 21-0 | 1-16 |
| அரண்மனை சிறுவயல் | | 6-50 | - - | | 14-36 | 16-55 | - - | - - |
| நடராஜபுரம் ... | | 7- | - - | | 14-46 | 17-5 | 21-12 | 1-30 |
| நாட்டரசன்கோட்டை | | 7-13 | 10-48 | | 14-59 | 17-18 | 21.25 | 1-45 |
| சிவகெங்கை ... | | 7-25 | 10-59 | | 15-19 | 17-34 | 21-36 | 1-57 |
| மானமதுரை ... | | 8-2 | 11-31 | | 15-56 | 18-10 | 22-10 | 2-30 |

* இக்குறியிட்ட வண்டிகள் நேரே மதுரைக்குச் செல்லுவன.

### மானமதுரையிலிருந்து—திருச்சிக்கு

| ஸ்டேஷன்கள். | | 32 நி. பாஸஞ்சர் | * 68 நி. பாஸஞ்சர் | 30 நி. பாஸஞ்சர். | 2 நி. இண்டோ சிலோன் எக் | 34 நி. பாஸஞ்சர். | 26 நி. பாஸ்ட் பாஸஞ்சர். | 8 நி. தனுஷ் பாஸ்ட் பாஸ |
|---|---|---|---|---|---|---|---|---|
| மானமதுரை ... | | | 8-12 | 12-15 | 14-47 | 17-0 | 18-50 | 23-6 |
| சிவகெங்கை ... | | | 8-46 | 12-51 | 15-18 | 17-35 | 19-24 | 23-38 |
| நாட்டரசன்கோட்டை | | | 8-57 | 13-2 | 15-30 | 17-46 | 19-35 | 23-50 |
| நடராஜபுரம் ... | | | 9-9 | 13-15 | - - | 17-58 | 19-47 | 0-4 |
| அரண்மனை சிறுவயல் | | | 9-19 | 13-25 | - - | 18-9 | - - | - - |
| கல்லல் ... | | | 9-25 | 13-32 | 15-55 | 18-15 | 19-59 | 0-19 |
| தேவகோட்டை ரஸ்தா | | | 9-42 | 13-49 | 16-14 | 18-32 | 20-16 | - - |
| காரைக்குடி | வரு | | 9-53 | 13-56 | 16-22 | 18-45 | 20-27 | 0-48 |
| | புற | 6-45 | 10-3 | 14-6 | 16-32 | | 20-36 | 0-58 |
| கோட்டையூர் .. | | 6-55 | 10-13 | 14-17 | 16-43 | | 20-47 | 1-9 |
| செட்டிநாடு ... | | 7-5 | 10-22 | 14-27 | 16-54 | | 20-57 | 1-20 |
| திருமயம் ... | | 7-24 | 10-38 | 14-44 | 17-9 | | 21-11 | 1-36 |
| நமன சமுத்திரம் ... | | 7-38 | 10-51 | 14-58 | 17-24 | | 21-25 | - - |
| புதுக்கோட்டை | வரு | 7-47 | 11-0 | 15-7 | 17-39 | | 21-34 | 1-5 |
| | புற | 7-53 | 11-6 | 15-13 | 17-48 | | 21-42 | 2-48 |
| திருச்சினப்பள்ளி ... | | 9-30 | 12-30 | 16-45 | 19-0 | | 22-58 | 3 -2 |

* இக்குறியிட்ட வண்டி மதுரையிலிருந்து நேரே வருவது.

### நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம். | நாள். | சென்னை | ரெங் கூன் | பினங்கு | சிங்கப் பூர் | செய் கோன் |
|---|---|---|---|---|---|---|
| ஈஸ்வர மார்கழி | 30 | 0 6 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 | 0 4 0 |
| தை | 29 | 0 6 0 | 0 4 9 | 0 4 0 | 0 4 0 | 0 4 0 |
| மாசி | 30 | 0 7 0 | 0 5 0 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 |
| பங்குனி | 30 | 0 7 3 | 0 5 0 | 0 4 0 | 0 4 0 | 0 4 0 |
| வெகுதானிய | | | | | 0 4 0 | 0 4 0 |
| சித்திரை | 31 | 0 7 3 | 0 4 6 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| வைகாசி | 32 | 0 7 3 | 0 4 0 | 0 4 6 | | |
| ஆனி | 31 | 0 6 9 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| ஆடி | 32 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| ஆவணி | 31 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| புரட்டாசி | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| அற்பசி | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| கார்திகை | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |

### பஞ்சாங்கம்

| பர்மா. | இங். | தமிழ். | வாரம். | வெகுதான்யஹூ-இங் 1938. பர்மா-1300. |
|---|---|---|---|---|
| 9 | டிசம்பர் மீ 29 | மார்கழி மீ 14 | வியா | ஸப்-13-23. உத்-51-58. சித்த யோகம். |
| 10 | 30 | 15 | வெள் | அஷ்-14-38. ரே-56-49. அமிர்த யோகம். |
| 11 | 31 | 16 | சனி | நவ-14-36. அசு-57-22. சித்த யோகம். |
| 12 | 1939 ஜனவரி மீ 1 | 17 | ஞாயி | தச-13-23. பர-56-48. சித்த யோகம். |
| 13 | 2 | 18 | திங் | ஏகா-11-0. கார்-55-6. மரண யோகம். |
| 14 | 3 | 19 | செவ் | துவா-7-32. ரோ-52-40. அமி சித் யோகம். |
| 15 | 4 | 20 | புதன் | திர-3-19. மிரு-49-25. சித்த யோகம் |
| 1 | 5 | 21 | வியா | ○ 52-52. திரு-45-46. மரண யோகம். |

REG NO. M. 3888 16 PAGES PRICE ANNA 1

SUBSCRIPTIONS
Inland Annual ... Rs. 5
Burma Annual ... Rs. 6
Foreign Annual ... Rs. 7

# ஊழியன்

ADVERTISEMENTS
One Inch S. C. per insertion As. 8
Court Notice per Inch Re. 1
Long Standing Advertisements given Concessions

The "Oolian", A Nationalist Tamil Weekly

| VOL. 18 | KARAIKUDI, 29 TH DECEMBER 1938, THURSDAY | NO. 26 |
|---|---|---|



Edited, Printed and Published by Raya Chockalingan for The India Publications Ltd., at the Oolian Power Press, Karaikudi.

